# ஹஜ்ஜின் சட்டங்கள்

பொருளடக்கம்



மூலம் : உர்தூ

தமிழில் :

அல்ஹாஜ் மவ்லானா மவ்லவீ
K.A. நிஜாமுத்தீன் மன்பயீ.

# ஹஜ்ஜின் சட்டங்கள்



தொகுத்தவர்:

மௌலவீ அல்ஹாஜ்

**K.A. நிஜாமுத்தீன் மன்பயீ**

வெளியீடு:

**பஷாரத் பப்ளிஷர்ஸ்**

83, அங்கப்ப நாயக்கன் தெரு,

சென்னை - 600 001.

போன்: 5225028

பொருளடக்கம் 

# உள்ளே உள்ளவை

# பதிப்புரை

*அல்ஹம்துலில்லாஹ்!*

''ஹஜ்ஜின் சட்டங்கள்'' என்ற இந்நூலை மூன்றாம் பதிப்பாக எங்கள் 'பஷாரத் பப்ளிஷர்ஸ்' மூலம் வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம். ஏனெனில், ஹஜ் சம்பந்தமாக பல நூல்கள் வெளிவந்துள்ளன. இருப்பினும் ஹஜ்ஜுடைய போதுமான சட்டங்களை சுருக்கமாகவும் விளக்கமாகவும் தருவதில் இந்நூல் முதலிடம் வகிக்கிறது என்றே சொல்லலாம்.

மக்களுக்குப் பயனுள்ள பல நூல்களை எழுதியுள்ள மௌலவீ K.A. நிஜாமுத்தீன் ஹஜ்ரத் அவர்கள் இந்நூலையும் தொகுத்தளித்துள்ளார்கள். அல்லாஹு தஆலா அவர்களுக்கு நீண்ட ஆயுளைத் தந்து இதுபோன்ற பயனுள்ள பல நூல்களைச் சமுதாயத்திற்கு வழங்கிட நல்லருள்பாலிப்பானாக!

இந்நூலின் மூலம் ஹாஜிகள் தங்களுடைய ஹஜ்ஜை ஏற்கப்பட்ட ஹஜ்ஜாக ஆக்கிக் கொள்வார்களாக! அதுவே, இந்நூலின் மூலம் எங்களுடைய நோக்கமுமாகும். அல்லாஹு தஆலா நம்மனைவருக்கும் நன் நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு நல்லுதவி செய்வானாக! ஆமீன்!

83, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை - 600 001.
1.4.95

தங்களின் ஆதரவை விரும்பும்
**பஷாரத் பப்ளிஷர்ஸ்**

# முன்னுரை

நஹ்மதுஹூ வநுஸல்லீ அலா ரசூலிஹில்கரீம்

இஸ்லாமிய சகோதரர்களே, இஸ்லாத்தில் ஐந்தாம் கடமையான ஹஜ்ஜாகிறது அருள் நிறைந்த ஒரு கடமையாகும். முறையுடன் ஹஜ்ஜு செய்கிறவர் அன்று பிறந்த பாலகனைப் போன்று பாவங்கள் நீங்கியவராகவும் ஒளிமயமான இதயத்தைப் பெற்றவராகவும் ஆகிவிடுகிறார். ஆனால், இத்தகைய நிலையை அடைவதற்கு ஹஜ்ஜுடைய ஒழுக்கங்களையும் அதன் சட்டதிட்டங்களையும் பக்தியுடன் பேணிச் செய்பவராக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் ஒரு பயணத்தை மட்டுமே மேற்கொண்டார் என்ற நிலை ஏற்பட்டுவிடும்.

மேலும், இக்காலத்தில் ஹஜ்ஜு செய்வதென்பது மிக எளிதாக ஆகிவிட்டது. அக்காலத்தைப் போன்று நீண்டகாலப் பயணத்தையும் சிரமங்களையும் மேற்கொள்ள வேண்டிய அவசியமில்லை என்பது தெளிவான விஷயம்.

அரசாங்கத்தின் மூலம் விண்ணப்பம் செய்து ஹஜ்ஜுக்குச் செல்வதுடன் வேறு பல வழிகளின் மூலமும் ஹஜ்ஜுக்குச் செல்வதற்குரிய வாய்ப்புகள் ஏற்பட்டுள்ளன.

எனவே, ஹஜ்ஜு கடமையானவர்கள் தாமதிக்காமல் தங்களின் இக்கடமையை உடனடியாக நிறைவேற்றி விடுவது அவசியமாகும்.

இந்நூலின் மூலம் பலன்பெறும் ஹாஜிகள் இதனைத் தொகுத்தளித்த எனக்கும் இதனை அச்சிட்டு வெளியிட்ட திரியெம் & பஷாரத் பப்ளிஷர்ஸ் நிறுவனத்தாருக்கும் புனிதமான இடங்களிலும் நேரங்களிலும் துஆச் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

1, ஏப்ரல் 1995
சென்னை

இஸ்லாமிய ஊழியன்
கே.ஏ.நிஜாமுத்தீன்

பொருளடக்கம்

## தல்பிய்யா




இதோ ! நான் வருகை தந்துள்ளேன். யா அல்லாஹ்! இதோ! நான் வருகை தந்துள்ளேன், நான் வருகை தந்துள்ளேன். உனக்கு யாதோர் இணையுமில்லை. இதோ நான் வருகை தந்துள்ளேன். நிச்சயமாக புகழனைத்தும், பாக்கியமனைத்தும் உனக்கே சொந்தம் ஆட்சியனைத்தும் உனக்கே! உனக்கு யாதோர் இணையுமில்லை

பொருளடக்கம்

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰى رَسُوْلِهِ الْكَرِيْمِ وَعَلٰى اٰلِهٖ وَاَصْحَابِهٖ اَجْمَعِيْنَ

## ஹஜ்ஜு கடமை பற்றி குர்ஆனும் ஹதீஸும்...

அல்லாஹு தஆலாவின் திரு வீட்டை ஹஜ்ஜு செய்தல் என்பது பேரின்பக் காதலைச் சேர்ந்த ஒரு வணக்கமாகவும் இஸ்லாத்தின் ஐந்தாவது கடமையாகவும் இருக்கிறது. குர்ஆன் ஷரீஃபிலும் ஹதீஸ்களிலும் இதனுடைய கடமையைப் பற்றி யும் முக்கியத்துவம் பற்றியும் வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

وَلِلّٰهِ عَلَى النَّاسِ حِجُّ الْبَيْتِ مَنِ اسْتَطَاعَ اِلَيْهِ سَبِيْلًا

அல்லாஹ்விற்காக அவன் திருவீட்டை ஹஜ்ஜு செய்தல் மனிதர்களின் மீது — அதன் பக்கம் போக்குவரத்திற்குச் சக்தி பெற்றவருக்குக் கடமையாகும். (3:97)

ஒரு ஹதீஸில் அருளப்பட்டிருப்பதாவது:

எவரொருவர் உடலுறவு கொள்ளாமலும் பாவம் செய்யா மலும் இருந்து அல்லாஹ்விற்காக ஹஜ்ஜு செய்கிறாரோ அவர், அவருடைய தாய் அன்று பெற்றெடுத்தவரைப் போன்று (பாவமற்றவராகத்) திரும்புகிறார். (மிஷ்காத்)

மேற்கூறப்பட்ட ஆயத்தில் ஹஜ்ஜின் கடமையும், ஹதீ ஸில் அதன் சிறப்பும் அறிவிக்கப்பட்டுள்ளது. எனவே, ஹஜ்ஜு கடமையான மனிதர் அதனைப் பிற்படுத்துவது கூடாது. நம்முடைய முஸ்லிம் சகோதரர்களில் பெரும்பாலா னவர்கள் இவ்விஷயத்தில் சோம்பல் உடையவர்களாக இருக்

கின்றனர். எப்பொழுது மரணம் வரும் என்பது நமக்குத் தெரியாது என்பதை அவர்கள் உணர வேண்டும்.

வசதியுள்ளவர் ஹஜ்ஜு செய்யாமல் இருப்பதைப் பற்றி பல்வேறு எச்சரிக்கைகள் ஹதீஸில் வந்துள்ளன. ஒரு ஹதீஸில்...

> வெளிப்படையான (அவசியத்) தேவையோ, அல்லது அநியாயக்கார அரசனோ, அல்லது (பிரயாணத்தைத்) தடுக்கும் நோயோ ஹஜ்ஜு செய்வதை விட்டும் அவரைத் தடை செய்யாத ஒருவர், ஹஜ்ஜு செய்யாத நிலையில் மரணமடைந்து விட்டால், அவர் விரும்பினால் யூதராகவோ அல்லது கிறிஸ்தவராகவோ மரணமடையட்டும். (மிஷ்காத்)

இது எவ்வளவு கடுமையான எச்சரிக்கை என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். அல்லாஹ் நம்மை காப்பாற்றி, அவனுடைய தீனின் மீது முஸ்லிம்கள் அனைவரும் நடப்பதற்குரிய நல்லுதவி செய்து, ஈமானின் மீது மரணமடைவதற்கு அருள்புரிந்து, தீய முடிவை விட்டும் காத்தருள்வானாக!

எனவே, ஹஜ்ஜு ஃபர்ளு என்பதில் உலமாக்கள் அனைவரும் ஏகோபித்த கருத்துடையவர்களாக இருப்பதால் அதனை மறுப்பவர் காஃபிராகிவிடுவார். இஸ்லாத்தின் எல்லையை விட்டு அப்பாற்பட்டவராகிடுவார்.

## ஹஜ் எப்பொழுது கடமையானது?

ஹஜ்ஜு ஹிஜ்ரீ ஒன்பதாம் ஆண்டு கடமையாக்கப்பட்டது. அதே ஆண்டு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களின் தலைமையில் முன்னூறு ஸஹாபாக்கள் கொண்ட ஒரு குழுவை ஹஜ்ஜுக்கு அனுப்பினார்கள். பிறகு ஹிஜ்ரீ பத்தாம் ஆண்டுதான் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஓர் இலட்சத்திற்கும் மேற்பட்ட ஸஹாபாக்களுடன் ஹஜ்ஜை நிறைவேற்றினார்கள்.

அதற்கு 'ஹஜ்ஜத்துல்விதாஃ' (—பயணவிடைபெறும் ஹஜ்) என்று கூறப்படும்.

## ஹஜ் கடமைக்குரிய நிபந்தனைகள்

ஒரு முஸ்லிமின் மீது ஹஜ்ஜு கடமையாவதற்கு எட்டு நிபந்தனைகள் இருக்க வேண்டும்.

1. முஸ்லிமாக இருப்பது.
2. பருவமடைந்தவராக இருப்பது.
3. அறிவுள்ளவராக இருப்பது. (பயித்தியக்காரன் மீது கடமையில்லை.)
4. சுதந்திரமானவராக இருப்பது (அடிமையின் மீது கடமையில்லை.)
5. பொருள் வசதி உடையவராக இருப்பது.
6. ஹஜ்ஜுடைய காலம் வருவது.
7. உடல் நலமுடையவராக இருப்பது.
8. வழியில் பயமில்லாமல் இருப்பது.

இந்த எட்டு நிபந்தனைகளும் சரியாக இருந்தால்தான் ஹஜ்ஜு கடமையாகும். எட்டில் ஒன்று இல்லாவிட்டாலும் கடமை என்பது கிடையாது.

## ஹஜ்ஜுக்குச் செல்லும்முன்

ஹஜ்ஜு கடமையானபின் அல்லாஹு தஆலாவின் மீது பரிபூரண நம்பிக்கை வைத்துப் புறப்படத் தயாராக வேண்டும். இக்காலத்தில் ஹஜ்ஜுக்குச் செல்வதற்கு அரசாங்கத்தின் மூலம் செல்வதுடன் தனியார் நிறுவனங்கள் மூலமும் செல் லும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

எனவே, ஹஜ்ஜுக்கு விண்ணப்பம் செய்வது ஹஜ்ஜுக் குத் தயாராகுதல் என்பதில் சேர்ந்ததாகும். அவ்வாறு அறி

விப்பு வந்தபின் எண்ணத்தைத் தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும். எண்ணத்தைத் தூய்மையாக்குதல் என்பதின் கருத் தென்னவென்றால், இந்தப் பிரயாணத்தில் அல்லாஹு தஆலா வுடைய திருப்பொருத்தம் பெறுவது மட்டுமே நோக்கமாக இருக்க வேண்டும். வெறும் பிரயாண நோக்கமோ, அல்லது உல்லாசப் பயண நோக்கமோ, அல்லது ஹாஜி என்று பெயர் பெற வேண்டுமென்ற நோக்கமோ இருக்கக்கூடாது. ஏனெ னில்,

إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ

"செயல்களுக்குரிய நன்மைகள் வழங்கப்படுவது எண் ணங்களைக் கொண்டுதான்" என்று ரஸூலுல்லாஹி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள்.

## ஹஜ்ஜின் சட்டங்களைக் கற்க வேண்டும்

பெரும் பொருளைச் செலவு செய்து கொண்டு, தன்னு டைய ஊரையும் குடும்பத்தினரையும் விட்டுப் பிரிந்து ஹஜ்ஜுக்குச் செல்லுகின்ற மனிதர்கள் அதனுடைய சட்ட திட்டங்களைத் தெரிந்து கொள்ளாமலிருப்பது மிகப் பெரிய வருந்தத்தக்க விஷயமாகும். இன்று பெரும்பாலான ஹாஜிகள் ஹஜ்ஜுடைய சட்டங்களைத் தெரிந்து கொள்ளாமல் இருப்பது டன், தன்னுடைய மனோ விருப்பத்தையும் பின்பற்றிச் செல்பவர்களாக இருக்கின்றனர். இது அல்லாஹ், ரஸூலுக் குப் பதிலாக தன் நஃப்ஸை திருப்திப்படுத்துவதாக ஆகிவிடுகி றது.

சிலர் தவாஃப் செய்யும் சரியான முறையை அறிந்திருப்ப தில்லை. இன்னும் சிலர் ஸயீ செய்கின்ற முறையை அறிந்தி ருப்பதில்லை. சிலர் ஷைத்தானுக்குக் கல்லெறிவதில் சட்டம் தெரியாமல் தமு (—ஆடறுத்துக் கொடுப்பது) வாஜிபாகக் கூடிய அளவுக்கு இருக்கிறார்கள். ஆகையால், ஹஜ்ஜு செய்ய உறுதிகொண்ட ஒவ்வொருவரும் ஹஜ்ஜுடைய சட்டதிட்டங் களை (—மஸாயில்களை) அறிந்து கொள்வது கட்டாயமாகும்.

## தவ்பாவும் அதன் முறையும்

விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டால், ஹஜ் பிரயாணத்தைத் தொடங்குவதற்கு முன்னதாக தூய மனதுடன் தன்னுடைய பாவங்களுக்காகத் 'தவ்பா' செய்திட வேண்டும். யாருக்காவது அநீதி இழைத்திருந்தால் அவரிடம் மன்னிப்புத் தேடிக் கொள்ள வேண்டும். யாருடைய உரிமையையாவது, எவருடைய பொருளையாவது அபகரித்திருந்தால் அதனை உரியவரிடம் நிறைவேற்றிட வேண்டும். யாருடைய மனதை யாவது நோகச் செய்திருந்தால், முறை தவறி எவரையாவது துன்புறுத்தியிருந்தால் அவரிடமெல்லாம் மன்னிப்புக் கேட் டுக் கொள்ள வேண்டும்.

தவ்பா செய்வதுடைய முஸ்தஹப்பான முறை பின்வரு மாறு: முதலாவதாக குளித்துக் கொள்ள வேண்டும். குளிப்ப தற்குரிய தேவை இல்லையானால் 'உளூ' செய்து கொள்ள வேண்டும். பிறகு தவ்பாவுடைய தொழுகை என்ற நிய்யத்தில் இரண்டு ரக்அத்துகள் தொழ வேண்டும். தொழுதபின் ஸல வாத்து ஓதவேண்டும். பிறகு பாவமன்னிப்புத் தேட வேண் டும். மிக்கத் தாழ்மையுடன் துஆ செய்ய வேண்டும். தன்னுடைய குற்றங்களுக்கும் பாவங்கட்கும் மன்னிப்புத் தேட வேண்டும். 'களா' தொழுகைகளின் சுமை இருந்தால் விரைவாக அதனை நிறைவேற்றிட வேண்டும். அடிக்கடி பாவமன்னிப்புக்குரிய பின்வரும் பிரார்த்தனையை செய்து கொண்டிருக்க வேண்டும்.

اَللّٰهُمَّ اِنِّيْٓ اَتُوْبُ اِلَيْكَ مِنَ الذُّنُوْبِ لَا اَرْجِعُ
اِلَيْهَا اَبَدًا. اَللّٰهُمَّ مَغْفِرَتُكَ اَوْسَعُ مِنْ ذُنُوْبِيْ
وَرَحْمَتُكَ اَرْجٰى عِنْدِيْ مِنْ عَمَلِيْ

*யா அல்லாஹ்! நிச்சயமாக நான் என் பாவங்களுக்கு தவ்பா செய்து உன்பக்கம் மீளுகிறேன்; அப்பாவங்களின் பக்கம் இனி எப்பொழுதும் திரும்பவே மாட்டேன். யாஅல்லாஹ், உன்னுடைய மன்னிப்பு என்னுடைய பாவங்களை விட மிக விசாலமானது; உன்னுடைய ரஹ்மத் என்னிடத்தில் என் அமலைவிட மிக்க ஆதரவுள்ளதாகும்.*

*(அல் ஹதீஸ்)*

## பெற்றோரின் அனுமதி

ஹஜ்ஜுக்குச் செல்பவர் பெற்றோர் உயிருடனிருந்தால் அவர்களிடம் அனுமதி பெறுதல் அவசியமாகும். பெற்றோர், மக்களுடைய உதவி தேவைப்படக் கூடியவர்களாக இருந்தால், அவர்களுடைய அனுமதி இல்லாமல் மக்கள் ஹஜ்ஜுக்குச் செல்வது மக்ரூஹ் ஆகும். மக்களுடைய உதவி அவர்களுக்குத் தேவைப்படாத நிலையிருந்தால் அப்பொழுது செல்வதில் குற்றம் ஏதுமில்லை. எனினும் பெற்றோரிடம் அனுமதி பெறுதல் சிறந்ததாகும். (ஜுப்தத்துல் மனாஸிக்)

நஃபிலான ஹஜ்ஜாக இருந்தால் அப்பொழுது பெற்றோருக்குக் கட்டுப்படுதல் அவசியமாகும். அவர்களின் பணிவிடைக்குத் தேவையானாலும் சரி, தேவை இல்லாவிட்டாலும் சரி.

சிறுவன் ஒருவன் பருவமடைந்து விட்டான். ஆனால், இன்னும் அவனுக்கு தாடி, மீசை முளைக்கவில்லை; அவன் பிரயாணம் செய்வதினால் குழப்பம் உண்டாகும் என்ற சந்தேகமிருந்தால், அவனுக்கு தாடிவரும் வரை பெற்றோர் அவனைத் தடுத்து வைத்தல் நல்லதாகும். பெற்றோர் இல்லாத பொழுது பாட்டன் பாட்டி பெற்றோரின் அந்தஸ்தில் உள்ளவர்களாவார்கள்.

எவரேனும் ஒருவர் கடனுடையவராய் இருந்து, அவர் உடனடியாக அக்கடனை நிறைவேற்ற வேண்டிய நிலையில்

ருந்தால், கடன் கொடுத்தவரிடம் அனுமதி பெறாமல் செல்வது மக்ரூஹ் ஆகும். (முஅல்லிமுல் ஹுஜ்ஜாஜ்)

## அமானிதமும் வஸிய்யத்தும்

எவருடைய பொருளாவது அமானிதமாக தன்னிடம் இருந்தால் அதனைத் திரும்ப ஒப்படைத்து விடவேண்டும். மேலும், தன்னுடைய பொறுப்புகளை கவனிப்பதற்கு தீன்தாரியான ஒருவரை நியமித்து, தன்னுடைய பொருட்கள் அனைத்தையும் கணக்கெடுத்து அவற்றை எழுதி அந்தப் பட்டியலை அவரிடம் ஒப்படைத்துச் செல்லவேண்டும். அத்துடன் தன் பெயரால் ஒரு வஸிய்யத்தும் எழுதி ஒப்படைக்க வேண்டும்.

ஹஜ்ஜுக்குச் செல்லும் பொழுது மனிதர்களைச் சந்தித்து முஸாஃபஹா செய்துவிட்டுச் செல்வது அவசியம். அவ்வாறே அவர் ஹஜ்ஜிலிருந்து திரும்பிவரும் பொழுது மக்கள் அவரைச் சந்திப்பதற்காகச் செல்வதும் அவசியம்.

## வீட்டை விட்டுப் புறப்படுதல்

வீட்டை விட்டுப் புறப்படுவதற்கு முன் மக்ரூஹான நேரமாக இல்லையானால் வீட்டில் இரண்டு ரக்அத் நஃபில் தொழ வேண்டும். முதல் ரக்அத்தில் அல்ஹம்து ஸூராவுக்குப் பின் குல் யா அய்யுஹல்காஃபிரூன் ஸூராவும் இரண்டாவது ரக்அத்தில் குல் ஹுவல்லாஹு ஸூராவும் ஓதுதல் நல்லது. பிறகு நன்றி தெரிவிக்கும் பொருட்டு அல்லாஹ்வின் பாதையில் கொஞ்சம் தானதருமங்கள் செய்து கொள்ள வேண்டும். இவ்வாறே தன்னுடைய மஹல்லா மஸ்ஜிதில் இரண்டு ரக்அத் நஃபில் தொழுது கொள்ள வேண்டும். ஸலாம் கொடுத்த பின் ஆயத்துல் குர்ஸீயும், லிஈலாஃபி குறைஷ் ஸூராவும் ஓதிக் கொண்டு, ஹஜ்ஜு பிரயாணத்தை இலேசாக்கித் தருமாறு அல்லாஹ்விடம் துஆ கேட்க வேண்டும்.

வீட்டை விட்டுப் புறப்படும்போது சிரித்துக் கொண்டும் மகிழ்ச்சியாகவும் வெளியாக வேண்டும். குடும்பத்தினரை

பொருளடக்கம்

விட்டுத் தனித்துப் பிரிந்து செல்லுகிறோம் என்ற எண்ணத்தில் சோம்பலாகவும் கவலையுடனும் செல்லக்கூடாது. ஏனெனில், இது மகிழ்ச்சியுடன் செல்ல வேண்டிய பிரயாணம். மேலும், ஒருநாள் நாம் இறந்தபின் இவ்வாறே அனைவரையும் விட்டு மறுமையின்பால் பிரயாணம் செல்ல வேண்டியதிருக்கிறது என்ற எண்ணமும் உண்டாக வேண்டும். வீட்டை விட்டுப் புறப்படும்பொழுது பின்வரும் பிரார்த்தனையை செய்து கொள்ள வேண்டும்.

بِسْمِ اللّٰهِ اٰمَنْتُ بِاللّٰهِ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ لَاحَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ اَللّٰهُمَّ اِنِّىْٓ اَعُوْذُبِكَ مِنْ اَنْ اَضِلَّ اَوْ اُضَلَّ اَوْ اَزِلَّ اَوْ اُزَلَّ اَوْ اَظْلِمَ اَوْ اُظْلَمَ اَوْ اَجْهَلَ اَوْ يُجْهَلَ عَلَىَّ

அல்லாஹ்வின் திருநாமத்தால்... நான் அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொண்டேன். அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்துள்ளேன். பாவங்களை விட்டுத் திரும்புதலும் நன்மைகள் செய்யச் சக்தியும் அல்லாஹ்வின் உதவியைக் கொண்டே தவிர இல்லை. யா அல்லாஹ்! நிச்சயமாக நான் வழி கெடுவதை விட்டும், நான் வழிகெடுக்கப்படுவதை விட்டும், நான் சருகுவதை விட்டும், சருகச் செய்யப்படுவதை விட்டும், நான் அநியாயம் செய்வதை விட்டும், அநியாயம் செய்யப்படுவதை விட்டும் நான் அறிவிலியாவதை விட்டும், என் மீது அறிவீனம் சுமத்தப்படுவதை விட்டும் உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன். (அல்ஹதீஸ்)

வீட்டை விட்டுப் புறப்படும்போது பெரியார்கள், உறவினர்கள், நண்பர்கள், அக்கம்பக்கத்திலுள்ள அண்டை வீட்டார்கள் அனைவரிடமும் முஸாஃபஹா செய்து, ஏதேனும் தவறு

செய்திருந்தால் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும். முஸாஃபஹா செய்யும் பொழுது பிரயாணம் செய்பவருக்காகப் பின்வருமாறு பிரார்த்தனை செய்யவும்.

أَسْتَوْدِعُ اللّٰهَ دِيْنَكَ وَأَمَانَتَكَ وَآخِرَ عَمَلِكَ
وَزَوَّدَكَ اللّٰهُ التَّقْوٰى وَيَسَّرَ لَكَ الْخَيْرَ حَيْثُ كُنْتَ

"உன்னுடைய தீனுக்கும் உன்னுடைய அமானிதத்திற்கும் உன்னுடைய அமலின் நல்ல முடிவிற்கும் அல்லாஹ்வை நான் அமானிதமாக ஆக்குகிறேன். அல்லாஹ் உனக்குத் தக்வாவைக் கட்டுச்சாதமாக ஆக்கித் தந்து, நீ இருக்குமிடமெல்லாம் நன்மையை உனக்கு இலேசாக்கி வைப்பானாக!"

(அல்ஹதீஸ்)

## விமானத்தில் இஹ்ராம்

இக்காலத்தில் கப்பலில் செல்வதைவிட விமானத்தில் ஹஜ்ஜுக்குச் செல்பவர்கள் தாம் அதிகம். விமானம் மூலம் ஹஜ்ஜுக்குச் செல்பவர்கள் தங்களுடைய இருப்பிடத்திலோ அல்லது விமான நிலையத்திலோ இஹ்ராம் கட்டிக் கொள்ள வேண்டும். ஏனெனில், விமானம் சில மணி நேரங்களில் ஜித்தா சென்றடைந்துவிடும். வழியில் இஹ்ராம் கட்டுவதற்கு இயலாது. எனவே, விமான நிலையம் சென்று விமானம் புறப்படுகிற சரியான நேரத்தைத் தெரிந்து, இஹ்ராம் கட்டுவது சிறப்பாகும்.

விமானத்தில் ஹஜ்ஜுக்குச் செல்பவர்கள் மற்றொரு சட்டத்தையும் இங்கு கவனிக்க வேண்டும். அதாவது: விமானம் இங்கிருந்து நேராக ஜித்தா செல்லும்பொழுது இஹ்ராம் கட்டும் எல்லையைக் கடந்து செல்கிறது. எனவே, விமானத்தில் செல்பவர் ஜித்தாவிலிருந்து, முதலில் மக்காவிற்குச் செல்ல வேண்டுமென்ற எண்ணத்திலிருந்தால், இஹ்ராம் இல்லாமல் ஹரம் எல்லையைக் கடக்கும்போது அவர் மீது

 

ஒரு 'தமு' (—ஆடறுத்துக் கொடுப்பது) வாஜிபாகும். எனவே இங்கிருந்தே இஹ்றாம் கட்டிக் கொண்டு செல்ல வேண்டும்.

ஜித்தாவிலிருந்து மதீனாவிற்குச் செல்ல வேண்டுமென்ற எண்ணமுள்ளவர்கள் இங்கிருந்து இஹ்றாம் கட்டிக் கொண்டு செல்ல வேண்டியதில்லை. அவர்கள் மதீனாவிலிருந்து மக்காவிற்கு வரும்பொழுது ஆபாரே அலீ (—துல்ஹுலைபா) என்ற இடத்தில் இஹ்றாம் கட்டிக் கொண்டு வரவேண்டும்.

விமானம் பறக்க ஆரம்பித்தவுடன் பின்வரும் துஆவை ஓதிக் கொள்ளவேண்டும்.

سُبْحَانَ الَّذِىْ سَخَّرَلَنَا هٰذَا وَمَا كُنَّا لَهٗ مُقْرِنِيْنَ وَاِنَّا اِلٰى رَبِّنَا لَمُنْقَلِبُوْنَ ٭ اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ فِىْ سَفَرِنَا هٰذَا الْبِرَّ وَالتَّقْوٰى وَمِنَ الْعَمَلِ مَا تَرْضٰى ٭ اَللّٰهُمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هٰذَا وَاطْوِلَنَا بُعْدَهٗ ٭ اَللّٰهُمَّ اَنْتَ الصَّاحِبُ فِى السَّفَرِ وَالْخَلِيْفَةُ فِى الْاَهْلِ ٭ اَللّٰهُمَّ اِنَّا نَعُوْذُبِكَ مِنْ وَعْثَاءِ السَّفَرِ وَكَاٰبَةِ الْمَنْظَرِ وَسُوْءِ الْمُنْقَلَبِ فِى الْمَالِ وَالْاَهْلِ وَالْوَلَدِ ٭

இதனை (—இவ்வாகனத்தை) எங்களுக்கு வசப்படுத்தித் தந்த ஒருவன் மகாத்தூய்மையானவன். நாங்கள் இதற்குச் சக்தி பெறக்கூடியவர்களாக இல்லை. நிச்சயமாக நாங்கள் எங்களுடைய இரட்சகனின் பக்கமே திரும்பிச் செல்பவர்களாக இருக்கிறோம்.

யா அல்லாஹ், நிச்சயமாக நாங்கள் எங்களுடைய இப்பிரயாணத்தில் நன்மையையும் தக்வாவையும் நீ பொருந்

திக் கொள்ளும் அமலையும் உன்னிடத்தில் வேண்டுகிறோம். யா அல்லாஹ், எங்களுடைய இப்பிரயாணத்தை எங்களுக்கு இலேசாக்கி வைத்து, இதன் தூரத்தை எங்களுக்குச் சுருக்க மாக்கி வைப்பாயாக! யா அல்லாஹ், இப்பிரயாணத்தில் நீயே (எங்களுக்குத்) தோழன். (எங்கள்) குடும்பத்தில் (நீயே) பிரதிநிதி. யா அல்லாஹ், பிரயாணத்தின் சிரமத்தை விட்டும் நிலைமை தீயதாக மாறுவதைவிட்டும் பொருளிலும் குடும்பத் திலும் குழந்தையிலும் தீய திரும்புதலை விட்டும் உன்னிடத் தில் பாதுகாப்புத் தேடுகிறோம்.

## கப்பலில் இஹ்ராம்

கப்பலில் பிரயாணம் செய்பவர்கள் பம்பாயில் கப்பல் ஏறினால் ஜித்தா போய்ச் சேருகிறவரை பத்து தினங்கள் ஹஜ்ஜுடைய மஸாயில்களைக் கற்றுக் கொள்வதற்குரிய நல்ல சந்தர்ப்பமாகும்.

கப்பல் பிரயாணத்தில் இஹ்ராம் கட்டுவதற்குரிய எல்லை யாகிய 'யலம்லம்' என்ற இடத்தை அடையும்வரை குறிப் பிட்ட எந்தச் சட்டமும் ஹாஜிகளுக்கு இல்லை.

கப்பல் புறப்பட்டு சில தினங்களில் செங்கடலின் பக்கம் செல்ல ஆரம்பித்தவுடன் இஹ்ராம் அணியத் தயாராகி விட வேண்டும். ஏனெனில், பிறகு ஏழெட்டு மணி நேரத்தில் யலம்லம் எல்லை வந்துவிடும். கப்பல்காரர்களும் விசில் ஊதி அறிவிப்புக் கொடுப்பார்கள். நாம் அதன் மீது மட்டும் நம்பிக்கை வைத்து இருந்துவிடக் கூடாது. நாமும் முன்னெச்ச ரிக்கையாக இருக்க வேண்டும்.

ஜித்தாவுக்குச் சென்றபின் முதலில் மக்காவுக்குச் செல்ல வேண்டுமென்ற நிய்யத் உள்ளவர்கள் யலம்லம் எல்லையில் இஹ்ராம் அணிந்து கொள்ள வேண்டும். ஜித்தாவிலிருந்து முதலில் மதீனாவுக்குச் செல்ல வேண்டுமென்ற நிய்யத் உள்ளவர்கள் யலம்லமில் இஹ்ராம் அணிய வேண்டிய தில்லை.

கப்பலில் ஏறி, அது புறப்பட்டவுடன் பின்வரும் துஆவை ஓதிக் கொள்ள வேண்டும்.

بِسْمِ اللّٰهِ مَجْرِيهَا وَمُرْسٰهَا اِنَّ رَبِّي لَغَفُورٌ رَّحِيمٌ ○ وَمَا قَدَرُوا اللّٰهَ حَقَّ قَدْرِهٖ وَالْاَرْضُ جَمِيعًا قَبْضَتُهٗ يَوْمَ الْقِيٰمَةِ وَالسَّمٰوٰتُ مَطْوِيّٰتٌ بِيَمِيْنِهٖ سُبْحٰنَهٗ وَتَعٰلٰى عَمَّا يُشْرِكُوْنَ ○

அல்லாஹ்வின் திருநாமத்தால்... இது செல்வதும் இது நிற்பதும் இருக்கிறது: நிச்சயமாக என்னுடைய இரட்சகன் மன்னிக்கிறவனாகவும் அளவற்ற அருளாளனாகவும் இருக்கி றான்.

அல்லாஹ்வுடைய தகுதிக்குத் தக்கவாறு அவனை அவர் கள் கண்ணியப்படுத்துவதில்லை. கியாமத் நாளில் பூமி முழுவதும் அவனுடைய கைப்பிடியிலும் வானங்கள் அவனு டைய வலக்கரத்தில் சுருட்டப்பட்டவையாகவும் இருக்கும்; அவன் மகாத்தூய்மையானவன். அவர்கள் இணை வைப்ப வற்றை விட்டும் அவன் மிக்க உயர்வானவன்.

## இஹ்ராமின் விளக்கம்

இஹ்ராம் என்பதின் பொருள் ஹராமாக்கி வைத்தல் என்பதாகும். ஹஜ்ஜு செய்யச் செல்லும் ஒருவர் இஹ்ராம் அணிந்து, நிய்யத்தும் செய்து, தல்பிய்யா சொல்ல ஆரம்பித்து விட்டால், சில விஷயங்கள் இஹ்ராமின் காரணத்தால் அவர்மீது ஹராமாகி விடுகின்றன.

ஆண்களுக்கு இஹ்ராம் என்பது தையலில்லாத ஒரு லுங்கி, ஒரு மேற்போர்வை ஆகிய இரண்டு துணிகளாகும்.

ஹஜ்ஜு செய்ய நாடுகிறவர் இவ்விரண்டையும் அணிந்து கொள்வதற்கு வழக்கத்தில் இஹ்ராம் என்று கூறப்படும்.

## இஹ்ராம் அணியும் எல்லைகள்

இஹ்ராம் என்னும் இரு ஆடைகளையும் எந்த இடத்திலிருந்து அணியவேண்டுமோ அந்த இடத்திற்குப் பெயர் 'மீகாத்' (எல்லை) என்று கூறப்படும். கடல் மார்க்கமாகக் கடலில் ஹஜ்ஜுக்குச் செல்பவர்களுக்கு 'யலம்லம்' என்ற இடம் எல்லையாகும். இது ஒரு மலைக்குப் பெயர். இன்று அவ்விடத்திற்கு 'ஸஃதிய்யா' என்று கூறுகின்றனர். இது பாக்கிஸ்தான், இந்தியா, யமன் ஆகிய நாடுகளுக்குரிய (மீகாத்) எல்லையாகும்.

இவ்வாறே மதீனாவின் புறத்திலிருந்து வருபவர்களுக்கு 'துல்ஹுலைபா' (ஆபாரே அலீ) என்ற இடமும், இராக்பகுதியிலிருந்து வருபவர்களுக்கு 'தாத்துஇர்க்' என்ற இடமும் எகிப்து, சிரியா பகுதியிலிருந்து வருபவர்களுக்கு ஜுஹ்பா என்ற இடமும் நஜ்து பகுதியிலிருந்து வருபவர்களுக்கு 'கரன்' என்ற இடமும் இஹ்ராம் கட்டுவதற்குரிய எல்லைகளாகும்.

எவரொருவர் மக்கா நகருக்குச் செல்வதற்காக — அது வியாபார விஷயமாக இருந்தாலும் சரி — வெளியிலிருந்து சென்றால், இஹ்ராம் அணியாமல் அந்த எல்லையைக் கடந்து செல்வது கூடாது. அவ்வாறு இஹ்ராம் அணியாமல் சென்றால் திரும்பவும் ஹரம் எல்லைக்கு வெளியே வந்து இஹ்ராம் அணிந்து கொண்டு செல்ல வேண்டும். இல்லாவிட்டால் ஒரு 'தமு' கொடுக்க வேண்டும் (முஅல்லிமுல் ஹுஜ்ஜாஜ்)

ஹாஜிகள் கப்பலில் பிரயாணம் தொடங்கிய பின் யலம்லம் வரை குறிப்பிட்ட எந்தச் சட்டமும் அவர்களுக்கு இல்லை. கப்பல் புறப்பட்டுச் சில தினங்களில் செங்கடலின் பக்கம் செல்ல ஆரம்பித்தவுடன் இஹ்ராம் அணியத் தயாராகி விடவேண்டும். ஏனெனில் பிறகு ஏழெட்டு மணி நேரத்தில் யலம்லம் வந்துவிடும். கப்பல்காரர்களும் விசில் ஊதி

அறிவிப்புக் கொடுப்பார்கள். ஆனால், நாம் அதன்மீது மட்டும் நம்பிக்கை வைத்து இருந்துவிடக் கூடாது. ஜித்தாவுக்குச் சென்றபின் முதலில் மக்காவுக்குச் செல்பவர் இஹ்ராம் அணியத் தயாராகி விட வேண்டும். ஜித்தாவுக்குச் சென்ற பின் முதலில் மதீனாவுக்குச் செல்பவராக இருந்தால் அவர் யலம்லமில் இஹ்ராம் அணியத் தேவையில்லை.

விமானத்தில் செல்பவர்கள் முன்னால் கூறப்பட்டபடி சென்னையிலிருந்து செல்பவர்கள் சென்னையிலும் பம்பாயிலி ருந்து செல்பவர்கள் பம்பாயிலும் இஹ்ராம் அணிந்து கொண்டு விமானம் ஏறவேண்டும்.

## இஹ்ராம் கட்டும் முறை

இஹ்ராம் கட்டுவதற்கு முன் தன்னைச் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். முடிகளைக் களைய வேண்டியதிருந்தால் அதனை நிறைவேற்ற வேண்டும். பிறகு இஹ்ராம் கட்டுகின்ற நிய்யத்தில் குளித்துக் கொள்ள வேண்டும். அதாவது: நான் இஹ்ராம் கட்டுவதற்காகக் குளிக்கிறேன் என்று நிய்யத்து செய்ய வேண்டும். ஏதேனும் நிர்ப்பந்தத்தின் காரணத்தால் குளிக்க முடியவில்லையானால் உளூ செய்து கொள்ள வேண் டும். அதன்பின் அணிந்திருக்கும் தையல் ஆடைகளைக் களைந்து இஹ்ராமுடைய லுங்கியை அணிந்து போர்வையை மேலே போட்டுக் கொள்ள வேண்டும். இஹ்ராம் அணிவ தற்கு முன் கறைபடியாத வாசனை திரவியத்தை இஹ்ராம் துணியில் பூசிக் கொள்ளலாம். இதனை முடிந்தால் செய்ய லாம்; இல்லாவிட்டால் குற்றமில்லை. அதன்பிறகு இஹ்ரா முக்காக என்ற நிய்யத்தில் இரண்டு ரக்அத் நஃபில் தொழ வேண்டும். இஹ்ராம் கட்டுவதற்கு முன் எந்தவகை இஹ்ராம் கட்டுவது என்று முடிவு செய்து கொள்ள வேண்டும்.

## இஹ்ராம், ஹஜ் வகைகள்

இஹ்ராம் நான்கு வகைகளாகவும், ஹஜ்ஜு மூன்று வகைகளாகவும் இருக்கின்றன:

1. இஃப்ராத் — தனித்துச் செய்தல். إِفْـرَاد

2. கிரான் — சேர்த்துச் செய்தல். قِرَان

3. தமத்துஃ — சுகம் பெற்றுச் செய்தல் تَمَتُّع

இவை மூன்றும் ஹஜ்ஜுடைய வகைகளாகும்.

ஹஜ்ஜுக்காக மட்டும் (உம்ரா இல்லாமல்) இஹ்ராம் கட்டுவதற்கு 'இஃப்ராத்' என்று கூறப்படும். இந்த இஹ்ராம் கட்டியவருக்கு 'முஃப்ரித்' என்று சொல்லப்படும்.

ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும் சேர்த்து இஹ்ராம் கட்டுவதற்கு 'கிரான்' என்று கூறப்படும். இந்த இஹ்ராம் கட்டியவருக்கு 'காரின்' என்று சொல்லப்படும்.

ஹஜ்ஜுடைய காலத்தில் முதலில் உம்ராவிற்காக இஹ்ராம் கட்டி, அதனை முடித்தபின் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டுவதற்குப் பெயர் 'தமத்துஃ' என்று கூறப்படும். இந்த இஹ்ராம் கட்டியவர் முதமத்திஉ என்று கூறப்படுவார்.

ஹஜ்ஜுக்குச் செல்பவர் இந்த மூன்றுவகை இஹ்ராம்களில் எதை வேண்டுமானாலும் செய்யலாம்.

நான்காவது உம்ராவிற்காக மட்டும் இஹ்ராம் கட்டுவது. இதற்காக ஆண்டு முழுவதும் எப்பொழுது வேண்டுமானாலும் இஹ்ராம் கட்டிச் செல்லலாம். ஆனால் துல்ஹஜ் மாதம் பிறை 9, 10, 11, 12 ஆகிய நான்கு நாட்களில் உம்ராச் செய்தல் மக்ரூஹ் தஹ்ரீமாகும்.

## இஹ்ராம் தொழுகை

மக்ரூஹான நேரமில்லாதபொழுது இஹ்ராமுடைய நிய்யத்தில் இரண்டு ரக்அத் நஃபில் தொழவேண்டும். தொழும்பொழுது தலையைத் துணியால் மூடித் தொழவேண்டும். முதல் ரக்அத்தில் ஸூரத்துல் ஃபாத்திஹாவுக்குப் பின் குல் யா அய்யுஹல் காஃபிரூன் ஸூராவும், இரண்டாவது ரக்அத்

தில் குல் ஹுவல்லாஹு ஸூராவும் ஓதவேண்டும். ஸலாம் கொடுத்தபின் அப்படியே உட்கார்ந்துகொண்டு தலையிலிருக் கும் துணியை எடுத்துவிட்டு நிய்யத்து செய்து கொள்ள வேண்டும். நிய்யத்துடன் சேர்த்துத் தல்பிய்யாவையும் சொல்ல வேண்டும்.

மக்ரூஹான நேரங்கள்: சூரிய உதய நேரம், சூரிய உச்சி நேரம், சூரியன் மறையும் நேரம். இம்மூன்று நேரங்களிலும் தொழுவது மக்ரூஹ் ஆகும்.

## பருவமடையாதோரின் இஹ்ராம்

எவரேனும் ஒரு ஹாஜியுடன் பருவமடையாத குழந்தை கள் ஹஜ்ஜுக்குச் சென்றால் அக்குழந்தையின் தையல் உடையை அகற்றி அதற்கு இஹ்ராம் உடையை அணிவிப்பது அதன் பொறுப்பாளர் மீது கடமையாகும். மேலும், அக்குழந் தையின் சார்பாக இஹ்ராமின் நிய்யத்து செய்து தல்பிய்யாவும் அவர் கூறவேண்டும். அக்குழந்தையே தல்பிய்யா சொல்ல முடியுமானால் அதனைச் சொல்லச் செய்யவேண்டும். அக்கு ழந்தைக்கு இஹ்ராம் அணிவித்த பின்னால் இஹ்ராமில் தடுக்கப்பட்ட விஷயங்களையெல்லாம் அது செய்யாதவாறு பாதுகாக்க வேண்டும். அவ்வாறு இஹ்ராமில் தடுக்கப்பட்ட ஏதேனும் ஒன்றை அக்குழந்தை செய்துவிட்டால், அதற்குரிய நஷ்டஈட்டை அதன் பொறுப்பாளர் நிறைவேற்றுவது அவசிய மாகும்.

## பெண்களின் இஹ்ராம்

பெண்களும் இஹ்ராமுடைய நிய்யத்துச் செய்து, அவர் கள் வழக்கமாக வீட்டில் அணிந்திருப்பது போன்று தையல் உடைகளையே அணிந்து கொள்ள வேண்டும். ஆனால், முகத்தின்மீது துணியைப் போடுவது கூடாது. முகம் திறந்தே இருக்க வேண்டும். எனினும், அந்நிய ஆண்களிடம் தங்களை மறைத்துக் கொள்ளும் பர்தா சட்டத்தைக் கடைப்பிடிக்கத்தான்

பொருளடக்கம்

வேண்டும். அவ்வாறு அந்நியர் மத்தியில் செல்ல வேண்டிய நேரத்தில், முகத்தில் துணிபடாதவாறு ஏதேனுமொரு பொருளைத் தலைமீது வைத்து அதன் மீது துணியைப் போட்டு முகத்தை மறைத்துக் கொள்ள வேண்டும். முகத்தின் மீது துணிபடக் கூடாது. இதுதான் பெண்களின் இஹ்ராமாகும். பெண்கள் காலில் காலுறை அணிந்து கொள்வதும் கூடும். அவர்கள் தல்பிய்யா சொல்லும் பொழுது அந்நிய ஆண்களுக்குக் கேட்குமளவுக்குச் சப்தமிட்டுச் சொல்லக்கூடாது.

யாரேனும் ஒரு பெண்ணுக்கு இஹ்ராம் நேரத்தில் மாதவிடாய், அல்லது பிள்ளைப்பேறு தொடக்கு ஏற்பட்டு விட்டால் அதனால் எவ்விதப் பிரச்சினையும் இல்லை. அப்படியே குளித்துவிட்டு, அல்லது உளு செய்துவிட்டு இஹ்ராம் கட்டிக் கொள்ளலாம். அதிலிருந்து சுத்தமாகும் வரை உம்ராச் செய்தால் கூடாது; அவ்வாறே மஸ்ஜிதில் நுழைவது, தவாஃப் செய்வது, குர்ஆனைத் தொடுவது, ஓதுவது ஆகியவையும் கூடாது. இவற்றைச் (மற்ற தஸ்பீஹ் திக்ரு ஆகியவற்றைச் செய்து வரலாம்.) சுத்தமான பின் செய்து கொள்ள வேண்டும். — நூல்: ஜுப்தத்துல் மனாஸிக்

## இஹ்றாமில் ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம்

ஆண்கள் இஹ்ராம்:

1. இஹ்ராமுடைய நேரத்தில் தலையை, முகத்தை மறைத்தல் கூடாது.

2. தையல் உடைகளை அணியக்கூடாது.

3. தல்பிய்யாவைச் சப்தமிட்டுச் சொல்ல வேண்டும்; அது சுன்னத்தாகும்.

பெண்கள் இஹ்ராம்:

1. தலையை மறைப்பது ஃபர்ளாகும். ஆனால் முகத்தில் துணி போடக்கூடாது.

பொருளடக்கம்

2. தையல் உடைகளை அணியலாம்.

3. சப்தமின்றித் தல்பிய்யா சொல்ல வேண்டும்.

## இஹ்ராமுடைய நிய்யத்து

'இஃப்ராத்' இஹ்ராமுடைய நிய்யத்து:

اَللّٰهُمَّ اِنِّيْٓ اُرِيْدُ الْحَجَّ فَيَسِّرْهُ لِيْ وَتَقَبَّلْهُ مِنِّيْ

யா அல்லாஹ்! நான் ஹஜ்ஜு செய்வதை நாடுகிறேன்; (அதற்காக இஹ்ராம் கட்டுகிறேன்.) இதனை எனக்கு இலே சாக்கி, என்னிடமிருந்து இதனை ஏற்றுக் கொள்வாயாக!

'கிரான்' இஹ்ராமுடைய நிய்யத்து:—

اَللّٰهُمَّ اِنِّيْٓ اُرِيْدُ الْحَجَّ وَالْعُمْرَةَ فَيَسِّرْهُمَا لِيْ وَتَقَبَّلْهُمَا مِنِّيْ

யா அல்லாஹ்! நான் ஹஜ்ஜையும் உம்ராவையும் நாடுகிறேன். அவ்விரண்டையும் நீ எனக்கு இலேசாக்கி வைத்து அவ்விரண்டையும் என்னிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக!

'தமத்துஃ' இஹ்ராமுடைய நிய்யத்து:

اَللّٰهُمَّ اِنِّيْٓ اُرِيْدُ الْعُمْرَةَ فَيَسِّرْهَا لِيْ وَتَقَبَّلْهَا مِنِّيْ

யா அல்லாஹ்! நிச்சயமாக நான் உம்ராவை நாடுகிறேன்; எனக்கு அதனை இலேசாக்கி, என்னிடமிருந்து அதனை ஏற்றுக் கொள்வாயாக!

மக்கா சென்று, உம்ராச் செய்துவிட்டு, பிறகு ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டவேண்டும். அந்த நிய்யத்து பின்னால் கூறப்படும்.

தனியாக உம்ராவுக்கு மட்டும் இஹ்ராம் கட்டும்பொழுதும் இதே நிய்யத்தைச் செய்ய வேண்டும். இஹ்ராம் கட்டி முடிந்தவுடன் மூன்றுமுறை தல்பிய்யா கூறவேண்டும்.

## தல்பிய்யா

لَبَّيْكَ اَللّٰهُمَّ لَبَّيْكَ ط لَبَّيْكَ لَاشَرِيْكَ لَكَ لَبَّيْكَ ط
اِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَاشَرِيْكَ لَكَ ط

இதோ! நான் வருகை தந்துள்ளேன். யா அல்லாஹ்! இதோ! நான் வருகை தந்துள்ளேன்; நான் வருகை தந்துள் ளேன். உனக்கு யாதோர் இணையுமில்லை இதோ நான் வருகை தந்துள்ளேன். நிச்சயமாக புகழனைத்தும், பாக்கியம னைத்தும் உனக்கே சொந்தம்; ஆட்சியனைத்தும் உனக்கே! உனக்கு யாதோர் இணையுமில்லை.

தல்பிய்யாவுக்குப் பிறகு இஹ்ராம் கட்டப்பட்டுவிட்டது. தல்பிய்யாவில் எந்த வார்த்தையும் கூடுதல் குறைவு செய்வது மக்ரூஹ் ஆகும். இஹ்ராம் கட்டியபின் எல்லா நேரங்களிலும் தல்பிய்யா சொல்லிக் கொண்டே இருக்கவேண்டும், அதாவது; உயரமான இடத்தில் ஏறும்பொழுதும், பள்ளத்தில் இறங்கும் பொழுதும், தொழுகைக்குப் பின்னாலும், நண்பர்களைச் சந்திக்கும்பொழுதும், காலையிலும் மாலையிலும் எல்லா நிலைகளிலும் தல்பிய்யா கூறிக் கொண்டே இருக்க வேண் டும். ஏனெனில், ஹஜ்ஜில் தல்பிய்யாவாகிறது, தொழுகையில் தக்பீருடைய அந்தஸ்தில் உள்ளதாகும். எனினும், அதிகச் சப்தமிட்டுக் கூறுதல், கத்துதல் கூடாது. குறிப்பாக மஸ்ஜிதுக ளில் தொழுபவர்களுக்கு இடையூறு ஏற்படும் வகையில் சப்தமிட்டு தல்பிய்யா சொல்லக்கூடாது. தல்பிய்யா சொல்லும் போதெல்லாம் குறைந்த அளவு மூன்று தடவை சொல்ல வேண்டும்; தல்பிய்யாவின் போது எவரிடத்திலும் பேசு வதோ, ஸலாம் சொல்லுவதோ கூடாது. இஹ்ராம் கட்டி மூன்று முறை தல்பிய்யா சொன்னவுடன் பிறகு ஸலவாத்து கூறவேண்டும். அதன் பிறகு துஆ கேட்கவேண்டும். அதில் பின்வரும் துஆ முஸ்தஹப்பாகும்:

اَللّٰهُمَّ اِنِّىٓ اَسْئَلُكَ رِضَاكَ وَالْجَنَّةَ وَاَعُوْذُبِكَ مِنْ غَضَبِكَ وَالنَّارِ ٭

*யா அல்லாஹ்! நிச்சயமாக நான் உன்னுடைய திருப்பொருத்தத்தையும் சொர்க்கத்தையும் உன்னிடத்தில் வேண்டுகிறேன்; உன்னுடைய கோபத்தை விட்டும் நரகத்தை விட்டும் உன்னிடத்தில் பாதுகாப்புத் தேடுகிறேன்.*

உம்ராவுக்காக இஹ்ராம் கட்டியவர் பைத்துல்லாஹ்வைத் தவாஃப் செய்ய ஆரம்பித்து ஹஜருல் அஸ்வதை முத்தமிட்டு விட்டால் (அல்லது முத்தமிடாமல் கையால் தொட்டு, அல்லது சாடையால் அதனை நிறைவேற்றி விட்டால்) உடனே தல்பிய்யா சொல்லுவதை நிறுத்திவிட வேண்டும்.

## இஹ்ராமுடைய ஃபர்ளுகள்

இஹ்ராமுடைய ஃபர்ளுகள் இரண்டு. 1) நிய்யத்து. அதாவது: எந்த வகை இஹ்ராம் கட்டுகிறோமோ அதற்குரிய நிய்யத்துச் செய்தல். 2) இஹ்ராம் கட்டியபின் அல்லாஹ்வுடைய மகத்துவத்தை எடுத்துக் கூறும் ஏதேனும் ஒரு வாசகத்தைக் கூறுதல். தல்பிய்யாவைப் போல், அல்லது ஸுப்ஹானல்லாஹ் என்பதைப்போல். இவ்விரண்டையும் விட்டுவிட்டால் இஹ்ராம் கூடாது.

## இஹ்ராமுடைய வாஜிபுகள்

இஹ்ராமின் வாஜிபுகள் இரண்டு. 1. மீகாத் என்னும் எல்லையிலிருந்து இஹ்ராம் கட்டுதல். 2. இஹ்ராமில் விலக்கப்பட்டவற்றை விட்டும் தவிர்ந்திருத்தல். வாஜிபுகளை விடுவதின் காரணமாக 'தமு' (ஆடறுத்தல்) அல்லது வேறு குற்றப் பரிகாரம் அவசியமாகும்.

## இஹ்ராம், தல்பிய்யா சம்பந்தமான சில விளக்கங்கள்

1. இஹ்ராமுடைய துணிகள் வெள்ளை நிறமுடையவையாக இருப்பது மிகச் சிறந்ததாகும்.

2. இஹ்ராம் கட்டுவதற்காக குளிக்க முடியாவிட்டால், உளூ செய்து கொள்ள வேண்டும். உளூவின்றி இஹ்ராம் கட்டுவது மக்ரூஹ் ஆகும்.

3. மக்ரூஹான நேரமில்லாவிட்டால் இஹ்ராம் கட்டியவுடன் முதலில் நஃபில் தொழுது கொள்ள வேண்டும்; அதன் பிறகு நிய்யத்து செய்யவேண்டும். நஃபில் தொழாமல் இஹ்ராம் கட்டுவது மக்ரூஹ் ஆகும்.

4. குளிர் காலமாக இருந்தாலும் இஹ்ராமுக்குமேல் கம்பளியை, அல்லது சால்வையை அணிவதோ, அல்லது தூங்கும்போது தலையை, முகத்தை மூடுவதோ கூடாது.

5. இஹ்ராம் கட்டியவுடன் தலையை துணியால் மூடிய நிலையில் நஃபில் தொழ வேண்டும்; ஸலாம் கொடுத்தவுடன் முதலில் தலையிலிருந்து துணியை எடுத்துவிட வேண்டும். அதன் பிறகுதான் நிய்யத்து செய்யவேண்டும்.

6. நிய்யத்து செய்தபின் எல்லா நேரங்களிலும் — தொழும் போதும் — தலை திறந்தே இருக்க வேண்டும்.

7. பெரும்பாலான ஹாஜிகள் இஹ்ராமின் மேல் துணியை வலது புஜம் வெளியில் தெரியும்படியாகப் போட்டுக் கொள்கின்றனர். இது தவறாகும். இவ்வாறு போடுவதற்கு இள்திபாஃ اضطباع என்று கூறப்படும். இள்திபாஃ என்பது தவாஃபுடைய நேரத்தில் மட்டும்தான் செய்ய வேண்டும். அதன் விளக்கம் பின்னால் கூறப்படும்.

## பெண்களுக்குரிய சில சட்டங்கள்

பெண்கள் இஹ்ராம் கட்டுகின்ற சமயத்தில் மாதவிடாய் ஏற்பட்டுவிட்டால் உளூ மட்டும் செய்து கொண்டு இஹ்ராம் கட்டிக் கொள்ள வேண்டும். கிப்லாவை முன்னோக்கி உட்கார்ந்து தல்பிய்யா கூறவேண்டும். தொழக்கூடாது. அதே நிலையில் தல்பிய்யா சொல்வது கூடும். எல்லா நேரங்களிலும் தல்பிய்யா சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும்.

தொழுவதும் தவாஃப் செய்வதும் மஸ்ஜிதிற்குள் நுழைவதும் குர்ஆனைத் தொடுவதும் ஓதுவதும் அவர்களுக்கு விலக்கலாகும். சுத்தமாகும் வரை இஹ்ராமிலேயே இருக்க வேண்டும். சுத்தமானபின் தவாஃப், ஸயீ செய்து முடியை வெட்டிக் கொண்டு இஹ்ராமைக் களைய வேண்டும்.

அந்த நேரத்தில் இஹ்ராமை முறிக்கும் செயல் ஏதேனும் நிகழ்ந்து விட்டால், குளித்துவிட்டு மறுபடியும் இஹ்ராம் கட்டிக் கொள்ள வேண்டும்.

தல்பிய்யாவை தனக்கு மட்டும் கேட்குமளவு சப்தமிட்டுச் சொல்ல வேண்டும். அதிக சப்தமிட்டுச் சொல்லக் கூடாது.

## இஹ்ராமில் தடுக்கப்பட்டவை

இஹ்ராமில் தடுக்கப்பட்ட விஷயங்களுக்கு (ஜினாயாத்) குற்றங்கள் என்று கூறப்படும். அவ்வித குற்றங்களில் ஏதேனும் ஒன்றை ஒருவர் செய்துவிட்டால் அக்குற்றம் மன்னிக்கப்படுவதற்குரிய நஷ்டஈடு கொடுப்பதற்கு 'ஜஸா' என்று கூறப்படும். எனவே, இஹ்ராம் கட்டியிருக்கும் நேரத்தில் பின்வரும் விஷயங்கள் ஹராமாகும்.

1. வாசனைப் பொருட்களை உபயோகிப்பது.
2. ஆண்கள் தையல் ஆடைகளை அணிவது.
3. ஆண்கள் தலையையும் முகத்தையும் மூடுவது.
4. முடியை நீக்குவது. அது எந்த வகையிலானாலும் சரி.
5. நகத்தை வெட்டுவது.

6. உடலுறவு கொள்ளுதல்.

7. ஹஜ்ஜுடைய வாஜிபுகளில் ஏதேனும் ஒன்றை விடுதல்.

8. தரையிலுள்ள மிருகங்களை வேட்டையாடுதல்.

## வாசனைப் பொருட்கள் விளக்கம்

உடலில் ஓர் உறுப்பிற்கு முழுமையாக, அல்லது பல உறுப்புகளுக்கு கொஞ்சம் கொஞ்சமாக ஒரே இடத்திலிருந்து ஏதேனும் ஒரு வாசனைப் பொருளைத் தடவுதல் குற்றமாகும். கஸ்தூரி, கற்பூரம், அம்பர், ஊதுபத்தி, சந்தனம், குங்குமம், பூக்கள், அத்தர், கிராம்பு, ஏலக்காய், பட்டை, நல்லெண்ணெய், வாசனை எண்ணெய் வகைகள் ஆகியவை வாசனைப் பொருட்களாகும். இவற்றில் ஏதேனும் ஒரு வாசனைப் பொருளை துணிகளில் ஒரு விரலின் நீள அகலத்திற்கு (பரப்பளவிற்கு)த் தடவினால், அல்லது முகத்தில் அதிக அளவிற்குத் தட்விக் கொண்டால், அல்லது வாசனையுள்ள சுருமாவை இரண்டு தடவையை விட அதிகமாகப் போட்டுக் கொண்டால், (தமு வாஜிபாகும்.) ஓர் ஆடறுத்துக் குர்பானீ கொடுத்தல் கட்டாயமாகும்.

## தையல் உடை விளக்கம்

இஹ்ராம் கட்டியவர் ஓர் இரவு அல்லது ஓர் பகல் (12 மணிநேரம்) தையலுள்ள ஆடையை அணிந்திருந்தால் 'தமு' வாஜிபாகும். தையல் ஆடை என்பது உடலில் அணியும் அமைப்பில் உள்ளதாகும். சட்டை, கைலி, மோஜா, பனியன், பைஜாமா, ஆகியவற்றைப் போல், ஓர் இரவு ஒரு பகலை விடக் குறைவாக அணிந்தால் அரைமரக்கால் கோதுமை அல்லது அதனுடைய கிரயம் தருமம் கொடுக்க வேண்டும்.

## தலையை மூடுவதின் விளக்கம்

இஹ்ராம் கட்டியவர் தையல் துணியினாலோ அல்லது

தையலற்ற துணியினாலோ தலையை, அல்லது முகத்தை முழுவதுமாக அல்லது நாலிலொரு பாகம், ஓர் இரவு அல்லது ஒரு பகல் முழுமையாக, அல்லது ஒரு நாளில் அதிக நேரம் மறைத்தால் தமு வாஜிபாகும். அதைவிடக் குறைவான நேரம் மறைத்தால் அரைமரக்கால் கோதுமை, அல்லது அதனுடைய கிரயம் வாஜிபாகும்.

## முடி களைவதின் விளக்கம்

முடியைச் சிரைப்பது, கத்தரிப்பது, பிடுங்குவது, அல்லது சுண்ணாம்பு, போன்ற பொருட்களைக் கொண்டு முடியை எடுப்பது, நெருப்பினால் கரிப்பது இவை அனைத்திற்கும் ஒரே சட்டந்தான். இஹ்ராம் கட்டியவர் தலையில், அல்லது தாடியில், அல்லது உடலில் ஏதேனும் ஓர் உறுப்பில் நாலி லொரு பாகம் முடியைக் களைந்தால் தமு வாஜிபாகும். அதற்குக் குறைவாக இருந்தால் மேற்கூறிய முறையில் தருமம் (ஸதகா) செய்வது வாஜிபாகும்.

## நகம் வெட்டுதலின் விளக்கம்

இஹ்ராம் கட்டியவர் இரண்டு கைகள், இரண்டு கால்கள், அல்லது ஒரு கை, ஒரு கால், விரல்களிலுள்ள நகங்களை ஒரே இடத்திலிருந்து கொண்டு எடுத்தால் ஒரு தமு வாஜிபா கும், ஒரு கை நகங்களை ஓரிடத்திலும், மற்றொரு கை நகங்களை மற்றோரிடத்திலும், இவ்வாறே நான்கு இடங்க ளில் நான்கு கை கால் விரல்களின் நகங்களை எடுத்தால் நான்கு தமு கொடுப்பது வாஜிபாகும்.

## உடலுறவின் விளக்கம்

இஹ்ராம் கட்டியவர் தன் மனைவியை ஆசையுடன் முத்தமிடுவது, அணைப்பது, ஆசையுடன் கையால் தொடு வது, உடலுறவு கொள்வது ஆகிய எதனையும் செய்தல் தடுக்கப்பட்டதாகும்.

அரஃபாவில் தங்குவதற்கு முன் உடலுறவு ஏற்பட்டு விட்டால் அவருடைய ஹஜ் வீணாகிவிடும். அதனை அடுத்த ஆண்டு 'களா' செய்ய வேண்டும். அத்துடன் ஒரு முழுமையான 'தமு'வும் கொடுக்க வேண்டும். அது ஒரு மாடு, அல்லது ஓர் ஒட்டகம் அறுப்பதாகும்.

அரஃபாவில் தங்கியபின் உடலுறவு ஏற்பட்டு விட்டால் ஹஜ் நிறைவேறிவிடும்; ஆனால், ஒரு முழுமையான தமு கொடுக்க வேண்டும்.

இரண்டு குற்றங்கள் இருக்கின்றன. அவற்றில் ஏதேனும் ஒன்றைச் செய்தாலும் ஒரு மாடு, அல்லது ஓர் ஒட்டகம் முழுமையாக குர்பானீ கொடுத்திட வேண்டும். 1. பெருந்தொடக்கு, அல்லது மாதவிடாய், அல்லது பிள்ளைப்பேறு தொடக்கு ஆகியவை இருக்கும் நேரத்தில் தவாஃப் ஜியாரத் செய்வது, 2. அரஃபாவில் தங்கியபின், தலைமுடி களைவதற்கு முன் மனைவியுடன் உடலுறவு கொள்வது, இவையிரண்டும் மிகப் பெரிய குற்றங்களாகும். எனவே, ஓர் ஒட்டகம் அல்லது ஒரு மாடு முழுமையாகக் கொடுப்பது வாஜிபாகும்.

இஹ்ராம் கட்டியவர் காரினாக (ஹஜ், உம்ரா இரண்டிற்கும் சேர்த்து இஹ்ராம் கட்டியவராக) இருந்தால், அவர் மேற்கூறிய குற்றங்களைச் செய்யும் பொழுது இரண்டு நஷ்டஈடு அவர்மீது வாஜிபாகும். ஒன்று உம்ராவிற்காக; மற்றொன்று ஹஜ்ஜுக்காக.

ஹஜ்ஜுடைய வாஜிபுகளில் ஏதேனும் ஒன்றை தகுந்த காரணமின்றி விட்டுவிட்டால் அப்பொழுது 'தமு' வாஜிபாகும். தகுந்த காரணத்துடன் விட்டிருந்தால் 'தமு' வாஜிபாகாது.

நூல்: முஅல்லிமுல் ஹுஜ்ஜாஜ்

இது சிறிய நூலாக இருப்பதால், குற்றங்கள் சம்பந்தமான சில மஸாயில்களை மட்டும் நாம் இங்கு எழுதியுள்ளோம். ஹாஜிகள் இஹ்ராமுடைய நேரத்தில் மிகப் பேணுதலாக இருக்க வேண்டும். குற்றங்கள் செய்து நன்மைகளை அழித்து விடும் நிலையை உண்டாக்கிவிடக் கூடாது!

## ஹரம் எல்லையும் துஆவும்

ஜித்தாவிலிருந்து மக்கா செல்லும் வழியில் தல்பிய்யாவை அதிகமாகச் சொல்லிக் கொண்டு செல்லவேண்டும். வழியில் ஹுதைபிய்யா என்றோர் இடமுண்டு. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் ஸஹாபாக்களும் மதீனாவிலிருந்து ஹிஜ்ரீ ஆறாம் ஆண்டு உம்ராவிற்காக வந்தபோது அவ்விடத்தில்தான் மக்கா காஃபிர்களால் தடை செய்யப்பட்டார்கள். இப்பொழுது அவ்விடத்தில் இரண்டு தூண்கள் நிறுத்தப்பட்டுள்ளன. அவ்விடத்திலிருந்துதான் ஹரமுடைய எல்லை ஆரம்பமாகிறது. இவ்விதமான அடையாளம் மக்காவின் நான்கு பகுதிகளிலும் அமைக்கப்பட்டுள்ளது. இந்த அடையாளங்களை ஹஜ்ரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி இப்றாஹீம் (அலை) அவர்களுக்கு அறிவித்துக் கொடுத்து, அவ்விடத்தில் நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் அடையாளமிட்டார்கள். பிறகு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவற்றை புதிதாக அமைத்தார்கள். அதன் பிறகு ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் அவற்றைப் புதுப்பித்தார்கள்.

(ஜுப்தத்துல் மனாஸிக்)

அந்த ஹரம் எல்லையை அடைந்தவுடன் எல்லாம் வல்ல பேரரசனாகிய அல்லாஹ்வின் திருச் சந்நிதானத்தில் அடியெடுத்து வைத்துள்ளோம் என்ற உணர்வு ஏற்பட வேண்டும். எனவே, மிகுந்த பயபக்தியுடனும் தாழ்மையுடனும், தவ்பாவும் இஸ்திஃபாருஞ் செய்தவராக உள்ளே நுழைய வேண்டும். பின்வரும் பிரார்த்தனையைப் புரிந்து கொள்ள வேண்டும்.

اَللّٰهُمَّ اِنَّ هٰذَا حَرَمُكَ وَحَرَمُ رَسُوْلِكَ فَحَرِّمْ لَحْمِيْ وَدَمِيْ

وَعَظْمِيْ وَبَشَرِيْ عَلَى النَّارِ. اَللّٰهُمَّ اٰمِنِّيْ مِنْ عَذَابِكَ

يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ وَاجْعَلْنِيْ مِنْ اَوْلِيَآئِكَ وَاَهْلِ

طَاعَتِكَ وَتُبْ عَلَيَّ إِنَّكَ أَنْتَ التَّوَّابُ الرَّحِيمُ

யா அல்லாஹ்! நிச்சயமாக இது உன்னுடைய புண்ணிய பூமியாகவும் உன்னுடைய தூதரின் புண்ணிய பூமியாகவும் இருக்கிறது. ஆகையால், என்னுடைய சதையையும், என் இரத்தத்தையும் என் எலும்பையும் என் மேனியையும் நரக நெருப்பின் மீது ஹராமாக்கி வைத்திடுவாயாக! யா அல்லாஹ்! உன்னுடைய அடியார் களை உயிர்க் கொடுத்து எழுப்புகின்ற நாளில் உன்னு டைய வேதனையை விட்டும் என்னை நீ காப்பாற்றுவா யாக! இன்னும் என்னை உன்னுடைய நேசர்களில் உள்ளவனாகவும் உனக்கு வழிபடுபவர்களில் உள்ளவனா கவும் ஆக்கியருள்வாயாக! என்னுடைய தவ்பாவை ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயமாக நீயே தவ்பாவை ஏற்றுக் கொள்பவனாகவும், நிகரற்ற அன்புடையோனாக வும் இருக்கிறாய்.

## மக்க மாநகரில் நுழையும்போது....

முதன் முதலாக மக்கமா நகர்மீது பார்வை விழும் பொழுது பின்வரும் துஆவை ஓதவேண்டும்.

اَللّٰهُمَّ اجْعَلْ لِّيْ بِهَا قَرَارًا وَارْزُقْنِيْ فِيْهَا حَلَالًا
اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْهَا اَللّٰهُمَّ ارْزُقْنَا جَنَاهَا وَحَبِّبْنَا
اِلٰٓى اَهْلِهَا وَحَبِّبْ صَالِحِيْ اَهْلِهَا اِلَيْنَا ۝



பொருளடக்கம்

யா அல்லாஹ்! எனக்கு இங்கு நிம்மதியை ஏற்படுத்துவாயாக! இதில் எனக்கு ஹலாலான உணவை வழங்குவாயாக! யா அல்லாஹ்! இதில் எனக்கு பரக்கத்து செய்வாயாக! யா அல்லாஹ்! இவ்வூரின் கனிகளை எங்களுக்கு வழங்கிடுவாயாக! இவ்வூராருக்கு எங்களைப் பிரியமாக்கி வைப்பாயாக! இவ்வூரின் நல்லடியார்களை எங்களுக்குப் பிரியமாக்கி வைப்பாயாக!

## மஸ்ஜிதுல் ஹராமில் நுழையும்போது

பைத்துல்லாஹ் (கஃபா) உடைய நான்கு புறங்களிலும் உயர்தரமான கட்டிடம் கட்டப்பட்டுள்ளது. அக்கட்டிடம் முழுமைக்கு மஸ்ஜிதுல் ஹராம் (புனிதப் பள்ளிவாசல்) என்று கூறப்படும். அதில் எந்த வாசல் வழியாக நுழைந்தாலும் ''நவைத்து ஸுன்னத்தல் இஃதிகாஃப்'' ஸுன்னத்தான இஃதிகாஃபை நான் நிய்யத்து செய்கிறேன் என்று நிய்யத்து செய்து கொள்ள வேண்டும். உள்ளே நுழையும் போது முதலில் வலது காலை உள்ளே எடுத்துவைத்து பின்வரும் துஆவை ஓதிக்கொண்டு நுழைய வேண்டும்.

بِسْمِ اللّٰهِ وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰى رَسُوْلِ اللّٰهِ
اَللّٰهُمَّ اغْفِرْ لِىْ ذُنُوْبِىْ وَافْتَحْ لِىْ اَبْوَابَ رَحْمَتِكَ

அல்லாஹ்வின் திருநாமத்தைக் கொண்டு நான் நுழைகிறேன். ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வுடைய திருத்தூதரின் மீது உண்டாவதாக! யா அல்லாஹ், என் பாவங்களை எனக்கு மன்னித்து, உன்னுடைய அருள்வாசல்களை எனக்கு நீ திறந்து விடுவாயாக!

பிறகு கஃபாவின் மீது பார்வைபட்டவுடன் மூன்று முறை 'அல்லாஹுஅக்பர், லாஇலாஹ இல்லல்லாஹ்' என்று கூறிவிட்டுப் பின்வருமாறு பிரார்த்தனை செய்ய வேண்டும்.

اَللّٰهُمَّ زِدْ هٰذَا الْبَيْتَ تَشْرِيْفًا وَّتَعْظِيْمًا وَتَكْرِيْمًا وَّمَهَابَةً وَّزِدْ مَنْ شَرَّفَهٗ وَكَرَّمَهٗ مِمَّنْ حَجَّهٗ اَوِ اعْتَمَرَهٗ تَشْرِيْفًا وَّتَكْرِيْمًا وَّبِرًّا. اَللّٰهُمَّ اَنْتَ السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ فَحَيِّنَا رَبَّنَا بِالسَّلَامِ

யா அல்லாஹ் இப்புனித இல்லத்திற்கு சிறப்பையும் மகத்துவத்தையும் கண்ணியத்தையும் அச்சத்தையும் அதிகப்படுத்துவாயாக! இதனை ஹஜ்ஜு செய்து உம்ரா செய்து இதனை சிறப்பாக்கி கண்ணியப்படுத்தியவருக்கும் சிறப்பையும் கண்ணியத்தையும் நன்மையையும் அதிகப்படுத்துவாயாக! யா அல்லாஹ்! நீ சாந்திமயமானவன்; சாந்தியாகிறது உன்னிலிருந்து உள்ளதுதான். எனவே, எங்கள் இரட்சகனே! சாந்தியுடன் எங்களை வாழச் செய்வாயாக!

இதன்பிறகு ஸலவாத்து கூறி, விரும்பிய துஆவைக் கேட்க வேண்டும். அந்த நேரம் துஆ ஏற்கப்படுகின்ற நேரமாகும். அப்பொழுது கேட்கப்படும் துஆவில் சிறந்தது கியாமத்து நாளில் கேள்வி கணக்கின்றி சொர்க்கத்தில் நுழைய வைப்பதற்குரிய துஆவைக் கேட்பதாகும். பின்வரும் துஆ முஸ்தஹப்பாகும்.

اَعُوْذُ بِرَبِّ الْبَيْتِ مِنَ الدَّيْنِ وَالْفَقْرِ وَمِنْ ضِيْقِ الصَّدْرِ وَعَذَابِ الْقَبْرِ

இவ்வீட்டின் இரட்சகனைக் கொண்டு கடனை விட்டும் வறுமையை விட்டும் நெஞ்சின் இறுக்கத்தை விட்டும் கப்ருடைய வேதனையை விட்டும் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்.

## ஹஜருல் அஸ்வதின் அருகில் கோரும் பிராா்த்தனை

اَللّٰهُمَّ اَنْتَ السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ وَاِلَيْكَ يَرْجِعُ السَّلَامُ فَحَيِّنَا رَبَّنَا بِالسَّلَامِ وَاَدْخِلْنَا دَارَ السَّلَامِ تَبَارَكْتَ رَبَّنَا وَتَعَالَيْتَ يَا ذَا الْجَلَالِ وَالْاِكْرَامِ ط اَللّٰهُمَّ زِدْ بَيْتَكَ هٰذَا تَعْظِيْمًا وَّتَشْرِيْفًا وَّمَهَابَةً وَزِدْ مِنْ تَعْظِيْمِهِ وَتَشْرِيْفِهِ مِنْ حَجَّةٍ وَّعُمْرَةٍ تَعْظِيْمًا وَّتَشْرِيْفًا وَّمَهَابَةً ط

யா அல்லாஹ்! நீ சாந்திமயமானவன்; சாந்தியாகிறது உன்னிலிருந்து உள்ளதுதான். உன் பக்கமே சாந்தி மீளும். எங்கள் இரட்சகனே! சாந்தியுடன் எங்களை வாழச் செய்வாயாக! சாந்தியின் வீட்டினில் எங்களை நுழையச் செய்வாயாக! நீ பாக்கியமடைந்து விட்டாய். எங்கள் இரட்சகனே! நீ உயர்வடைந்து விட்டாய். மாண்பும் சங்கையும் உடையவனே! யா அல்லாஹ்! உன்னுடைய இந்த வீட்டிற்கு மகத்துவத்தையும் சிறப்பையும் அச்சத்தையும் அதிகப்படுத்துவாயாக! ஹஜ், உம்ராவின் காரணத்தால் இதனுடைய மகத்துவத்திலிருந்தும் சிறப்பிலிருந்தும் மேலும் மகத்துவத்தையும் சிறப்பையும் அச்சத்தையும் அதிகப்படுத்துவாயாக!

## தவாஃபின் விளக்கமும் சிறப்பும்

தவாஃப் என்றால் ஏதேனும் ஒரு பொருளை அதன் நான்கு திசைகளிலும் சுற்றிவருதல் என்பதாகும். ஹஜ்ஜ

டைய பாடத்தில் தவாஃப் என்று கூறப்பட்டால், கஃபாவை அதனுடைய நான்கு புறங்களிலும் குறிப்பிட்ட முறைப்படி சுற்றி வருதல் என்பது கருத்தாகும்.

ஹாஜிகளுக்கு ஃபர்ளான தொழுகைகட்குப்பின் நஃபில்கள் தொழுவதைவிட பைத்துல்லாஹ்வை தவாஃப் செய்வது அதிக நன்மைக்குரியதாகும். ''அல்லாஹ் தஆலா ஒவ்வொரு நாளும் கஃபாவின் மீது 120 ரஹ்மத்துகளை இறக்கி வைக்கிறான்; அவற்றில் கஃபாவை தவாஃப் செய்பவருக்கு 60 ரஹ்மத்துகளும் அங்கு தொழுபவருக்கு 40 ரஹ்மத்துகளும், கஃபாவைப் பார்த்துக் கொண்டிருப்பவருக்கு 20 ரஹ்மத்துகளும் வழங்கப்படுகின்றன'' என்று ஒரு ஹதீஸில் அருளப்பட்டுள்ளது. ஒரு மனிதர் அங்கு தவாஃப் செய்து, தொழுது, கஃபாவைப் பார்த்துக் கொண்டுமிருந்தால் அவர் அனைத்து ரஹ்மத்துகளுக்கும் உரியவராகி விடுவார்.

''மேலும், பைத்துல்லாஹ்வை தவாஃப் செய்கின்ற ஒருவர் தன் பாதத்தை ஓர் அடியெடுத்து வைத்து மற்றோர் அடி எடுத்து வைக்கும் முன் அவருடைய ஒரு பாவம் மன்னிக்கப்பட்டு, ஒரு நன்மை அவருடைய செயலேட்டில் எழுதப்பட்டு, ஒரு தரஜா (பதவி) உயர்த்தப்படுகிறது'' என்று மற்றொரு ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

எனவே, மக்கமா நகரில் இருக்கும் காலமெல்லாம் ஃபர்ளான தொழுகையை முடித்தபின் எந்த அளவுக்கு முடியுமோ அவ்வளவு அதிகமாக தவாஃப் செய்து கொண்டே இருக்க வேண்டும். ஏனெனில், இந்த வணக்கம் அந்த இடத்தைத் தவிர உலகில் வேறு எங்கும் செய்ய முடியாத ஒரு வணக்கமாகும். எனவே, அங்கு தங்கி தவாஃப் செய்வதை பெரும் பாக்கியமாகக் கருதவேண்டும்; நம்முடைய பெரும்பான்மையான நேரத்தை ஹரம் ஷரீஃபிலேயே தங்கி, கஃபாவைப் பார்த்துக் கொண்டிருப்பதிலேயே கழிக்க வேண்டும். ஏனெனில், அதனைப் பார்ப்பதும் இபாதத் ஆகும்.

பொருளடக்கம்

ஓர் அறிவிப்பில், ''எவரொருவர் ஐம்பது தவாஃப் செய்கிறாரோ, அவர், தன் தாய் வயிற்றிலிருந்து அன்று பிறந்த குழந்தையைப் போன்று பரிசுத்தமானவராக ஆகிவிடுகிறார்'' என்று கூறப்பட்டுள்ளது.

கஃபாவைச் சுற்றிலுமுள்ள தவாஃப் செய்கின்ற இடத்திற்கு 'மதாஃப்' என்று கூறப்படும். கஃபாவின் நான்கு புறங்களையும் ஏழு தடவை சுற்றினால் ஒரு தவாப் நிறைவு பெறும். ஒரு தடவை சுற்றுவதற்கு அரபியில் 'ஷவ்த்' என்று கூறப்படும். ஏழு ஷவ்த் (சுற்று) கொண்டது ஒரு தவாஃப் ஆகும்.

ஒருவர் கஃபாவிற்கு சமீபமாக இருந்து சுற்றினால் ஒரு சுற்று சுமார் 120 கஜம் கொண்டதாக இருக்கும். ஏழு சுற்றுக்கும் 840 கஜம் ஆகிறது. ஒவ்வொரு ஃபர்ளு தொழுகைக்குப் பிறகும் ஒரு தவாஃப் செய்தால், ஒரு நாளைக்கு ஐந்து தவாஃப் ஆகிவிடும். அவற்றின் மொத்த தூரம் 4200 கஜ தூரமாகிறது; அதாவது இரண்டரை மைல் தூரம். ஒரு நாளைக்கு ஐந்து தவாஃப் என்பது மிகக் குறைந்த அளவாகும். அல்லாஹ்வின் நல்லடியார்கள் சிலர் நாளொன்றுக்கு எழுபது தவாஃப்கள் செய்தவர்களும் இருக்கின்றனர். எத்தனை தவாஃப்கள் செய்தாலும் அதில் களைப்பு என்பது ஏற்படாது. இது இஸ்லாத்தின் வணக்கத்திலுள்ள அற்புதமான (முஃஜிஸா) தன்மையாகும்.

ஹிஜ்ரீ எட்டாம் ஆண்டு மக்கா வெற்றியானதிலிருந்து இதுவரை ஃபர்ளான தொழுகை நேரங்களைத் தவிர, சில அசம்பாவிதங்கள் ஏற்பட்ட சில தினங்களைத் தவிர மற்றெல்லா நேரங்களிலும் ஒரு வினாடி கூட இடைவிடாது தவாஃப் செய்யப்பட்டுக் கொண்டே இருக்கிறது. மனித உள்ளங்களை ஈர்ப்பதற்குரிய விசேஷமான தன்மை பைத்துல்லாஹ்வுக்கு இருக்கிறது என்பதற்கு இது தெளிவான ஆதாரமாகும். இவ்வித அற்புதத் தன்மை எந்தக் காலத்திலும் எந்த இடத்திற்கும் இருக்க முடியாது.

பொருளடக்கம்

## தவாஃபின் வகைகள்

தவாஃபில் ஏழுவகைகள் உள்ளன:

1. தவாஃபெஃ குதூம் طَوَافُ قُدُوْم

(வருகையின் தவாஃப்) எவர் இஹ்ராம் கட்டிக் கொண்டு முதன் முறையாக பைத்துல்லாஹ்வுக்கு வருகிறாரோ அவர் மீதும், ஹஜ் இஃப்ராதுக்காகவோ ஹஜ் கிரானுக்காகவோ இஹ்ராம் கட்டியவரின் மீதும் இந்த தவாஃப் ஸுன்னத்தாகும். ஹஜ் தமத்துஃ செய்பவருக்கும் உம்ரா மட்டும் செய்பவருக்கும் இது ஸுன்னத்தல்ல. இவ்வாறே மக்காவாசிகளின் மீதும் இது அவசியமல்ல. ஆனால், எவரேனும் ஒரு மக்காவாசி ஹரமுடைய எல்லையைவிட்டு அப்பாற் சென்று விட்டு, பிறகு இஃப்ராத், அல்லது கிரான் உடைய இஹ்ராம் கட்டிக் கொண்டு வந்தால் அவர் மீது இந்தத் தவாஃப் ஸுன்னத்தாகும்.

2. தவாஃபெஃ ஜியாரத் طَوَافُ زِيَارَة

(சந்திப்பின் தவாஃப்) இதற்கு தவாஃப்ருக்னு, தவாஃப் ஹஜ், தவாஃப் பர்ளு, தவாஃப் இஃபாளா என்று வேறு பெயர்களும் உண்டு. இது ஹஜ்ஜுடைய ஃபர்ளாகும். இதனைச் செய்யாமல் ஹஜ்ஜு பூரணமாகாது. இதனுடைய நேரம் துல்ஹஜ்ஜு பிறை பத்து ஸுப்ஹு ஸாதிக் நேரத்திலிருந்து பன்னிரண்டாம் நாள் சூரியன் மறையும் வரையுள்ள காலமாகும்.

3. தவாஃபெஃ உம்ரா طَوَافُ عُمْرَة

உம்ராவின் (தவாஃப்) உம்ராவுக்காக இஹ்ராம் கட்டியவரின் மீது இந்த தவாஃப் அவசியமாகும்.

4. தவாஃபெஃ விதாஃ طَوَافُ وِدَاع

மக்கமா நகரை விட்டும் தன் ஊருக்குப் புறப்படக் கூடியவரின் மீது இது வாஜிபாகும்.

5. தவாஃபெஃ நதர் طَوَافُ نَذَرْ

(நேர்ச்சையின் தவாஃப்) எவரேனும் ஒருவர் தவாஃப் செய்வ தாக நேர்ச்சை செய்து கொண்டால் அவர் மீது அது வாஜிபாகும்.

6. தவாபெஃ தஹிய்யா طَوَافُ تَحِيَّة

(காணிக்கை தவாஃப்) ஒருவர் மஸ்ஜிதுல்ஹராமில் நுழையும் போதெல்லாம் தவாஃப் செய்வது முஸ்தஹப்பாகும். அதற்கு தவாபெஃ தஹிய்யா என்று கூறப்படும்.

7. தவாபெஃ நஃபில் طَوَافُ نَفْل

(நஃபிலான தவாஃப்) இது ஃபர்ளு தொழுகை அல்லாத மற்றெல்லா நேரங்களிலும் செய்யப்படுகின்ற தவாஃபாகும்.

இவற்றில் 1,3 ஆகிய இரண்டு தவாஃபுகளைத் தவிர மற்றவைகளுக்கு இஹ்ராம் தேவையில்லை.

## இஸ்திலாம், இள்திபாஃ, ரமல் விளக்கம்

இஸ்திலாம் என்பது, ஹஜருல் அஸ்வத் கல்லை வாயால் முத்தமிடுவது அல்லது கையால் தொட்டு முத்தமிடுவது அல்லது சாடை செய்து முத்தமிடுவது ஆகியவற்றிற்குச் சொல்லப்படும்.

இள்திபாஃ என்பது, மேற்போர்வையின் வலப்பக்கத்தை வலது அக்குளுக்குக்கீழ் போட்டு, அதன் ஓரத்தை இடது தோளின் மீது போட்டுக் கொள்வதாகும். எந்தத் தவாஃபுக்குப் பின் ஸயீ செய்வது இருக்கிறதோ அந்தத் தவாஃபின் ஏழு சுற்றுகளிலும் இள்திபாஃ செய்வது ஸுன்னத்தாகும்.

ரமல் என்பது, தவாஃபுடைய முதல் மூன்று சுற்றுகளிலும் தோளை அசைத்து அசைத்து, பாதங்களை நெருக்கி வைத்து சற்று வேகமாக நடை போடுவதற்குச் சொல்லப்படும். எந்த தவாஃபுக்குப்பின் ஸயீ இருக்கிறதோ அந்த தவாஃபில் மட்டும் ரமல் செய்ய வேண்டும்.

பொருளடக்கம்

எந்த தவாஃபுக்குப் பின் ஸயீ இல்லையோ அதில் ரமல் செய்வது கூடாது. பெண்களுக்கு எப்போதும் இள்திபாஃ, ரமல் இரண்டும் கிடையாது.

## தவாஃபின் ஷரத்துகள்

*1.* உளூவுடன் இருத்தல், *2.* உடலில் மறைக்க வேண்டிய அளவு மறைத்தல், *3.* உடலும் உடையும் சுத்தமாக இருத்தல், *4.* தங்கடமில்லாதவர் காலால் நடந்து தவாஃப் செய்தல், *5.* ஹதீமுக்கு வெளியில் தவாஃப் செய்தல், *6.* ஹஜருல் அஸ்வதிலிருந்து தவாஃபை ஆரம்பித்தல்.

## தவாஃப் செய்யும் முறை

பைத்துல்லாஹ்வுடைய எந்த மூலையில் ஹஜருல் அஸ் வத்கல் பதிக்கப்பட்டிருக்கிறதோ அந்த மூலையிலிருந்து தவாஃபுக்கு நிய்யத்து செய்ய வேண்டும். அதாவது, ஹஜ்ருல் அஸ்வத் முற்றிலும் வலப்பக்கம் இருக்கும் முறையில், ஹஜருல் அஸ்வதுக்கு நேராக தரையில் போடப்பட்டிருக்கும் கோட்டின் மீது நின்று தவாஃபை ஆரம்பிக்க வேண்டும்.

*1.* ஏழு சுற்றுகள் கொண்டது ஒரு தவாஃபாகும்.

*2.* தவாஃபின் ஒவ்வொரு சுற்றும் ஹஜருல் அஸ்வதிலி ருந்து ஆரம்பித்து ஹஜருல் அஸ்வதில் முடிவடைகிறது.

*3.* பெரும்பாலானவர்கள் ஹஜருல் அஸ்வதை முத்தமிடு வது போன்றே ருக்னெயமானியையும் முத்தமிடுகின்றனர்; இது தவறாகும். முத்தமிடுதல் ஹஜருல் அஸ்வதுக்கு மட்டுந் தான் உரியதாகும்.

*4.* ஒவ்வொரு தவாஃபுக்குப் பிறகும் தவாஃபுடைய இரண்டு ரக்அத்துகள் தொழுவது வாஜிபாகும். மக்ரூஹான நேரத்தைத் தவிர மற்ற நேரங்களில் தொழ வேண்டும். இந்தத் தொழுகையை ஹரம் ஷரீஃபின் எந்த இடத்தில் வேண்டுமா

னாலும் தொழலாம். ஆனால், மகாமெ இப்றாஹீமுக்குப் பின்னால் தொழுவது முஸ்தஹப்பாகும்.

5. அஸர் தொழுதபின் மஃரிப் வரையுள்ள நேரத்தில் தவாஃப் செய்தால், தவாஃபுடைய தொழுகையை மஃரிப் ஃபர்ளு தொழுகைக்குப்பின் தொழ வேண்டும். மஃரிபுடைய ஸுன்னத்தை அதற்குப் பின் தொழ வேண்டும். ஏனெனில், அஸருக்குப் பின் நஃபில் தொழுவது மக்ரூஹ் ஆகும்.

## தவாஃபின் மற்றொரு விளக்கம்

அல்லாஹுதஆலாவின் கிருபையால் ஒவ்வோர் ஆண்டும் ஹாஜிகளின் எண்ணிக்கை அதிகமாகிக்கொண்டே இருக்கிறது. ஹஜ்ஜுடைய தினத்திற்கு மூன்று, நான்கு நாட்களுக்கு முன்னும் பின்னும் மிக அதிகமான நெருக்கடி ஏற்படுகிறது. ஹஜ்ஜுக்குப்பின் தவாபெஃ ஜியாரத்தில் மக்கள் நெருக்கம் அதிகமாக இருக்கிறது. இதனால் ஸவூதி அரசாங்கம் தவாஃப் செய்யும் இடத்தை விசாலப்படுத்தியுள்ளது. ஹிஜ்ரீ 1399ல் இவ்வாறு விஸ்தரிக்கப்பட்ட பின் தவாஃப் செய்வது சிரமமில்லாமல் இருந்து வருகிறது. எனவே, விஸ்தரிக்கப்பட்ட இடத்தில் தவாஃப் செய்வது, பழைய இடத்தில் தவாஃப் செய்வது போன்ற நன்மைக்குரியதுதான். எனினும், கூட்டம் குறைவாக உள்ள நேரத்தில் பழைய இடத்தில் தவாஃப் செய்வது சிறப்பாகும். கீழே மதாஃபில் தவாப் செய்வது போன்றே மேல்மாடியிலும் தவாஃப் செய்வதும் கூடும்.

## தவாஃபின் நிய்யத்து

தவாஃபுக்கு நிய்யத்து செய்வது ஃபர்ளாகும். நிய்யத்தில்லாமல் தவாஃப் நிறைவேறாது. மனதினால் எண்ணி, நாவினாலும் அதனைக் கூறுவதுதான் சிறப்பாகும். நாவினால் கூறாமல் மனதில் மட்டும் நிய்யத்து செய்வது போதுமானது; அதுதான் ஃபர்ளாகும். நிய்யத்தின் வாசகம் பின்வருமாறு:

பொருளடக்கம்

اَللّٰهُمَّ اِنِّىْ اُرِيْدُ طَوَافَ بَيْتِكَ الْحَرَامِ سَبْعَةَ اَشْوَاطٍ لِلّٰهِ تَعَالٰى فَيَسِّرْهُ لِىْ وَتَقَبَّلْهُ مِنِّىْ

யா அல்லாஹ், உன்னுடைய சங்கைக்குரிய வீட்டை அல்லாஹ்விற்காக ஏழு சுற்றுகள் தவாஃப் செய்ய நாடுகிறேன்; எனவே, அதனை எனக்கு இலேசாக்கி வைத்து, என்னிலிருந்து அதனை ஏற்றுக் கொள்வாயாக!

நிய்யத்து செய்த பின் ஹஜருல் அஸ்வதுக்கு எதிரில் நின்று, தொழுகைக்குக் கைகளை உயர்த்துவதுபோல் காது வரை கைகளை உயர்த்தி, பின்வரும் தக்பீரைக் கூற வேண்டும்.

بِسْمِ اللّٰهِ اَللّٰهُ اَكْبَرُ وَلِلّٰهِ الْحَمْدُ

## தவாஃபின் சுருக்கமான துஆ

தவாஃபை ஆரம்பித்து ஹஜருல் அஸ்வதிலிருந்து முல்தஜிமின் பக்கமாகச் சுற்ற வேண்டும். அப்பொழுது இந்த துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ اِيْمَانًا بِكَ وَتَصْدِيْقًا بِكِتَابِكَ وَوَفَاءً بِعَهْدِكَ وَاتِّبَاعًا لِسُنَّةِ نَبِيِّكَ مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ

யா அல்லாஹ், உன்னைக் கொண்டு ஈமான் கொண்டதற்காக, உன்னுடைய வேதத்தை உண்மைப்படுத்தியதற்காக, உன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக, உன்னுடைய நபி முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பின்பற்றியதற்காக இந்த தவாஃபை நான் செய்கிறேன்.

மகாமெ இப்றாஹீமுக்கு அருகில் வந்தவுடன் பின்வரு மாறு துஆ செய்ய வேண்டும்!

اَللّٰهُمَّ اِنَّ هٰذَا الْبَيْتَ بَيْتُكَ وَالْحَرَمَ حَرَمُكَ وَالْاَمْنَ اَمْنُكَ وَهٰذَا مَقَامُ الْعَائِذِبِكَ مِنَ النَّارِ فَاَجِرْنِيْ مِنَ النَّارِ

யா அல்லாஹ், நிச்சயமாக இந்த வீடு உன்னுடைய வீடு; இந்த ஹரம் (புனித பூமி) உன்னுடைய ஹரம்; அபயம் என்பது உன்னுடைய அபயம்தான். இது நரகத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடும் இடம். எனவே, நரகை விட்டும் என்னை நீ காத்தருள்வா யாக!

ருக்னெ ஷாமீ அருகில் சென்றவுடன் பின்வரும் துஆ செய்ய வேண்டும்.

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُبِكَ مِنَ الشَّكِّ وَالشِّرْكِ وَالشِّقَاقِ وَالنِّفَاقِ وَسُوْءِ الْاَخْلَاقِ وَسُوْءِ الْمُنْقَلَبِ فِي الْاَهْلِ وَالْمَالِ وَالْوَلَدِ

யா அல்லாஹ்! நிச்சயமாக நான் சந்தேகம், இணை வைத்தல், பிரிவினை, நயவஞ்சகம், தீய பண்புகள், குடும்பத்திலும் பொருளிலும் குழந்தையிலும் தீய திரும் புதல் ஆகியவற்றை விட்டும் உன்னிடத்தில் பாதுகாப்புத் தேடுகிறேன்.

'மீஜாபெ ரஹ்மத்' இடத்தில் பின்வரும் துஆ செய்ய வேண்டும்.

اَللّٰهُمَّ اَظِلَّنِىْ تَحْتَ ظِلِّ عَرْشِكَ يَوْمَ لَا ظِلَّ اِلَّا
ظِلُّكَ وَلَا بَاقِىَ اِلَّا وَجْهُكَ وَاسْقِنِىْ مِنْ حَوْضِ نَبِيِّكَ
مُحَمَّدٍ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ شَرْبَةً هَنِيْئَةً مَّرِيْئَةً
لَا اَظْمَاُ بَعْدَهَا اَبَدًا ؕ

யா அல்லாஹ், உன்னுடைய நிழலைத் தவிர வேறு நிழலில்லாத நாளில் உன்னைத்தவிர (வேறு எவரும்) நிலைத்திருக்காத நாளில் அர்ஷுடைய நிழலின் கீழ் எனக்கு நிழல் தருவாயாக! உன்னுடைய நபி முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய ஹவ்ளுல் கவ்தரிலிருந்து மதுரமான இனிமையான ஒரு மிடறு நீரை — அதற்குப் பிறகு எப்பொழுதும் நான் தாகிக்க மாட்டேனே அவ்விதமான நீரை எனக்கு — நீ புகட்டுவாயாக!

ருக்னெ யமானியிலிருந்து ஹஜருல் அஸ்வதுக்குப் போகும்போது பின்வரும் துஆவை ஓத வேண்டும்.

رَبَّنَآ اٰتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَّفِى الْاٰخِرَةِ حَسَنَةً
وَّقِنَا عَذَابَ النَّارِ ؕ وَاَدْخِلْنَا الْجَنَّةَ مَعَ الْاَبْرَارِ ؕ
يَا عَزِيْزُ يَا غَفَّارُ يَا رَبَّ الْعٰلَمِيْنَ

எங்கள் இரட்சகனே, இவ்வுலகில் எங்களுக்கு அழகிய வாழ்வையும் மறுமையில் அழகிய வாழ்வையும் நீ தந்தருள்

வாயாக! இன்னும், நரக வேதனையை விட்டும் எங்களைக் காத்தருள்வாயாக! நல்லோர்களுடன் சுவன பதியில் எங்களை நுழையச் செய்வாயாக! மிகைத்தவனே! மிக்க மன்னிப்ப வனே! அகிலத்தின் இரட்சகனே!

இந்த துஆக்களும்கூட தெரியாதவர்கள் ஒவ்வொரு சுற்றி லும் ரப்பனா ஆதினா... என்ற துஆவை, அல்லது, பின்வரும் மூன்றாம் கலிமாவை ஓதிக் கொள்ளவும்.

سُبْحَانَ اللهِ وَالْحَمْدُ لِلّٰهِ وَلَآ اِلٰهَ اِلَّا اللهُ وَاللهُ
اَكْبَرُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللهِ الْعَلِيِّ الْعَظِيْمِ

ஒரு தவாஃப் என்பது ஏழு சுற்றுகளாகும். ஒவ்வொரு சுற்றிலுள்ள துஆக்களை ருக்னெ யமானியுடன் முடித்துக் கொண்டு, அங்கிருந்து ஹஜருல் அஸ்வத் வரை ஒவ்வொரு சுற்றிலும் ரப்பனா ஆதினா... என்ற துஆவை ஓத வேண்டும்.

மேற்கூறப்பட்டது தவாபின் சுருக்கமான துஆவாகும். நீளமான துஆக்களை ஓதமுடியாதவர்கள் இதனையே ஒவ் வொரு சுற்றிலும் ஓதிக் கொள்ளலாம். முடிந்தவர்கள் பின்வ ரும் நீளமான துஆக்களை ஒவ்வொரு சுற்றிலும் ஓதிக் கொள்ள வேண்டும்.

## முதல் சுற்றில்....

سُبْحَانَ اللهِ وَالْحَمْدُ لِلّٰهِ وَلَآ اِلٰهَ اِلَّا اللهُ وَاللهُ
اَكْبَرُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللهِ الْعَلِيِّ الْعَظِيْمِ

وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰى رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَللّٰهُمَّ اِيْمَانًا بِكَ وَتَصْدِيْقًا بِكِتَابِكَ وَوَفَاءً بِعَهْدِكَ وَاتِّبَاعًا لِسُنَّةِ نَبِيِّكَ وَحَبِيْبِكَ مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ الْعَفْوَ وَالْعَافِيَةَ وَالْمُعَافَاةَ الدَّائِمَةَ فِى الدِّيْنِ وَالدُّنْيَا وَالْاٰخِرَةِ وَالْفَوْزَ بِالْجَنَّةِ وَالنَّجَاةَ مِنَ النَّارِ ۝

அல்லாஹ் மகாப்பரிசுத்தமானவன். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அல்லாஹ் மிகப் பெரியவன். பாவத்தை விட்டுத் திரும்புதலும் நன்மை செய்ய சக்தியும் உயர்வான மகத்தான அல்லாஹ்வின் உதவியைக் கொண்டே தவிர இல்லை. சலவாத்தும் ஸலாமும் ரசூலுல்லாஹி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீது உண்டாவதாக!

யா அல்லாஹ், உன்னைக் கொண்டு ஈமான் கொண்டதற் காக, உன் வேதத்தை உண்மைப்படுத்தியதற்காக, உன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக, உன்னுடைய ஹபீபா கிய நபி முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நடைமுறையைத் துயர்ந்ததற்காக (இந்தத் தவாபை) நிறைவேற்றுகிறேன்.

பொருளடக்கம்

யா அல்லாஹ், நிச்சயமாக நான் உன்னிடம் மன்னிப்பையும், சுகத்தையும் தீனிலும், துன்யாவிலும், மறுமையிலும் நிரந்தரமான நலத்தையும்; சொர்க்கத்தைக் கொண்டு வெற்றியையும், நரகத்தை விட்டு ஈடேற்றத்தையும் வேண்டுகிறேன்.

**இரண்டாம் சுற்றில்....**

اَللّٰهُمَّ اِنَّ هٰذَا الْبَيْتَ بَيْتُكَ وَالْحَرَمَ
حَرَمُكَ وَالْاَمْنَ اَمْنُكَ وَالْعَبْدَ عَبْدُكَ
وَاَنَا عَبْدُكَ وَابْنُ عَبْدِكَ وَهٰذَا مَقَامُ
الْعَائِذِ بِكَ مِنَ النَّارِ ۝ فَحَرِّمْ لُحُوْمَنَا
وَبَشَرَتَنَا عَلَى النَّارِ ۝ اَللّٰهُمَّ حَبِّبْ اِلَيْنَا
الْاِيْمَانَ وَزَيِّنْهُ فِيْ قُلُوْبِنَا وَكَرِّهْ اِلَيْنَا
الْكُفْرَ وَالْفُسُوْقَ وَالْعِصْيَانَ وَاجْعَلْنَا
مِنَ الرَّاشِدِيْنَ ۔ اَللّٰهُمَّ قِنِيْ عَذَابَكَ
يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ ۝ اَللّٰهُمَّ ارْزُقْنِيَ
الْجَنَّةَ بِغَيْرِ حِسَابٍ ۝

யா அல்லாஹ், நிச்சயமாக இந்த வீடு உன்னுடைய வீடு. இப்புனித பூமி உன்னுடைய புனித பூமி. அபயம் என்பது உன்னுடைய அபயம்தான். அடிமையும் உன்னுடைய அடிமை

நான். நானோ உன்னுடைய அடிமையாகவும் உன் அடிமையின் மகனாகவும் இருக்கிறேன். இது உன்னைக் கொண்டு நரகத்தை விட்டும் பாதுகாப்புத் தேடுகின்ற இடமாகும். எனவே, எங்களுடைய சதைகளையும் மேனிகளையும் நரகத்தின் மீது ஹராமாக்கி வைத்திடுவாயாக!

யா அல்லாஹ், ஈமானை எங்களுக்குப் பிரியமானதாக ஆக்கி வைத்து, அதனை எங்களுடைய இதயங்களில் அழகு படுத்தி வைப்பாயாக! குஃப்ரையும் பாவத்தையும் மாறு செய்வதையும் எங்களுக்கு வெறுப்பாக்கி வைத்து, எங்களை நேர் வழியாளர்களில் உள்ளவர்களாக ஆக்கிடுவாயாக!

யா அல்லாஹ், உன்னுடைய அடியார்களை எழுப்பும் நாளில் உன் வேதனையை விட்டும் என்னை நீ காப்பாற்றுவாயாக! யா அல்லாஹ், கேள்வி கணக்கின்றி சொர்க்கத்தை எனக்கு நீ தந்தருள்வாயாக!

## மூன்றாம் சுற்றில்...

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُبِكَ مِنَ الشَّكِّ وَالشِّرْكِ
وَالشِّقَاقِ وَالنِّفَاقِ وَسُوْٓءِ الْاَخْلَاقِ
وَسُوْٓءِ الْمَنْظَرِ وَالْمُنْقَلَبِ فِى الْمَالِ وَالْاَهْلِ
وَالْوَلَدِ ۔ اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ رِضَاكَ
وَالْجَنَّةَ وَاَعُوْذُبِكَ مِنْ سَخَطِكَ وَالنَّارِ ۔
اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُبِكَ مِنْ فِتْنَةِ الْقَبْرِ
وَاَعُوْذُبِكَ مِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ

4

யா அல்லாஹ், நிச்சயமாக நான் சந்தேகம், இணைவைத்தல், பிளவுபடுதல், நயவஞ்சகம் தீய குணங்கள், பொருளிலும், குடும்பத்திலும் குழந்தையிலும் தீயதோற்றம், தீய திரும்புதல், ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.

யா அல்லாஹ், நிச்சயமாக நான் உன்னுடைய பொருத்தத்தையும் சொர்க்கத்தையும் உன்னிடம் வேண்டுகிறேன். உன்னுடைய கோபத்தைவிட்டும் நரகத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.

யா அல்லாஹ், நிச்சயமாக நான் கப்ருடைய குழப்பத்தை விட்டும் வாழ்வின் குழப்பத்தை விட்டும் மரணத்தின் குழப்பத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.

**நான்காம் சுற்றில்**

اَللّٰهُمَّ اجْعَلْهُ حَجًّا مَّبْرُوْرًا وَّسَعْيًا
مَّشْكُوْرًا وَّذَنْبًا مَّغْفُوْرًا وَّعَمَلًا صَالِحًا
مَّقْبُوْلًا وَّتِجَارَةً لَّنْ تَبُوْرَ يَا عَالِمَ مَا فِي
الصُّدُوْرِ اَخْرِجْنِيْ يَا اَللّٰهُ مِنَ الظُّلُمَاتِ
اِلَى النُّوْرِ ۞ اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ مُوْجِبَاتِ
رَحْمَتِكَ وَعَزَآئِمَ مَغْفِرَتِكَ وَالسَّلَامَةَ
مِنْ كُلِّ اِثْمٍ وَّالْغَنِيْمَةَ مِنْ كُلِّ بِرٍّ وَّ
الْفَوْزَ بِالْجَنَّةِ وَالنَّجَاةَ مِنَ النَّارِ ۞ رَبِّ

قَنِّعْنِيْ بِمَا رَزَقْتَنِيْ وَبَارِكْ لِيْ فِيْمَا أَعْطَيْتَنِيْ وَاخْلُفْ عَلَىٰ كُلِّ غَائِبَةٍ لِّيْ بِخَيْرٍ

யா அல்லாஹ், இதனை ஒப்புக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜாகவும் நன்றி செலுத்தப்பட்ட முயற்சியாகவும் மன்னிக்கப்பட்ட பாவமாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்ட நல்ல அமலாகவும் நஷ்டமில்லா வியாபாரமாகவும் ஆக்கியருள்வாயாக!

நெஞ்சங்களில் உள்ளவற்றை அறிகிறவனே, யா அல்லாஹ், இருள்களிலிருந்து ஒளியின் பக்கம் என்னை நீ வெளியாக்குவாயாக!

யா அல்லாஹ், உன்னுடைய ரஹ்மத்தைக் கட்டாயமாக்கி வைப்பவற்றையும் உன்னுடைய மன்னிப்பை உறுதியாக்கி வைப்பவற்றையும் பாவங்கள் அனைத்தை விட்டும் சுகத்தையும் நன்மைகள் அனைத்திலிருந்து கொள்ளையடிப்பதையும் சொர்க்கத்தைக் கொண்டு வெற்றியையும் நரகத்தை விட்டு ஈடேற்றத்தையும் உன்னிடம் நான் வேண்டுகிறேன்.

என்னுடைய இரட்சகனே, நீ எனக்குக் கொடுத்ததைக் கொண்டு என்னை போதுமாக்கி வைப்பாயாக! நீ எனக்குக் கொடுத்துள்ளதில் எனக்கு பரக்கத்துச் செய்வாயாக! மறைந்த ஒவ்வொன்றின் மீதும் எனக்கு நன்மையைப் பகரமாக்கி வைப்பாயாக!

## ஐந்தாம் சுற்றில்

اَللّٰهُمَّ اَظِلَّنِيْ تَحْتَ ظِلِّ عَرْشِكَ يَوْمَ لَا ظِلَّ اِلَّا ظِلُّ عَرْشِكَ وَلَا بَاقِيَ اِلَّا وَجْهُكَ

وَاسْقِنِيْ مِنْ حَوْضِ نَبِيِّكَ سَيِّدِنَا مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ شَرْبَةً هَنِيْئَةً مَّرِيْئَةً لَّا أَظْمَأُ بَعْدَهَا أَبَدًا ۝ اَللّٰهُمَّ إِنِّيْ أَسْئَلُكَ مِنْ خَيْرِ مَا سَئَلَكَ مِنْهُ نَبِيُّكَ سَيِّدُنَا مُحَمَّدٌ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَعُوْذُبِكَ مِنْ شَرِّ مَا اسْتَعَاذَكَ مِنْهُ نَبِيُّكَ سَيِّدُنَا مُحَمَّدٌ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَللّٰهُمَّ إِنِّيْ أَسْئَلُكَ الْجَنَّةَ وَنَعِيْمَهَا وَمَا يُقَرِّبُنِيْ إِلَيْهَا مِنْ قَوْلٍ أَوْ فِعْلٍ أَوْ عَمَلٍ وَأَعُوْذُبِكَ مِنَ النَّارِ وَمَا يُقَرِّبُنِيْ إِلَيْهَا مِنْ قَوْلٍ أَوْ فِعْلٍ أَوْ عَمَلٍ ۝

யா அல்லாஹ், உன்னுடைய அர்ஷின் நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத நாளில், உன்னுடைய உள்ளமையைத் தவிர (வேறு எதுவும்) மீதியில்லாத நாளில் உன்னுடைய அர்ஷின் நிழலின் கீழ் எனக்கு நிழல் தருவாயாக! உன்னுடைய நபி, எங்கள் தலைவர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய ஹவ்ளிலிருந்து இன்பமான, மகிழ்ச்சிகரமான ஒருமிடறு நீரை எனக்கு நீ புகட்டுவாயாக! அதன் பிறகு எப்பொழுதும் நான் தாகிக்காத நிலையில் புகட்டுவாயாக!

யா அல்லாஹ், உன்னுடைய நபி எங்களின் தலைவர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன்னிடம் எந்த நன்மைகளையெல்லாம் கேட்டார்களோ அவற்றை உன்னிடம் நான் வேண்டுகிறேன். உன்னுடைய நபி, எங்கள் தலைவர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எந்தத் தீமைகளைவிட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடினார்களோ அவற்றை விட்டும் உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்.

யா அல்லாஹ், சொர்க்கத்தையும் அதனுடைய பாக்கியத்தையும், சொல்லாலும் செயலாலும் அதன் பக்கம் நெருக்கமாக்கி வைக்கும் காரியத்தையும் உன்னிடம் நான் வேண்டுகிறேன். நரகத்தை விட்டும், சொல்லாலும் செயலாலும் அதன் பக்கம் நெருக்கமாக்கி வைக்கும் காரியத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.

## ஆறாம் சுற்றில்

اَللّٰهُمَّ اِنَّ لَكَ عَلَيَّ حُقُوْقًا كَثِيْرَةً
فِيْمَا بَيْنِيْ وَبَيْنَكَ وَحُقُوْقًا كَثِيْرَةً
فِيْمَا بَيْنِيْ وَبَيْنَ خَلْقِكَ ۔ اَللّٰهُمَّ مَا كَانَ لَكَ
مِنْهَا فَاغْفِرْهُ لِيْ وَمَا كَانَ لِخَلْقِكَ فَتَحَمَّلْهُ
عَنِّيْ وَاَغْنِنِيْ بِحَلَالِكَ عَنْ حَرَامِكَ
وَبِطَاعَتِكَ عَنْ مَعْصِيَتِكَ وَبِفَضْلِكَ
عَنْ مَّنْ سِوَاكَ يَا وَاسِعَ الْمَغْفِرَةِ ۔ اَللّٰهُمَّ

إِنَّ بَيْتَكَ عَظِيْمٌ وَّوَجْهَكَ كَرِيْمٌ وَ
اَنْتَ يَا اَللّٰهُ حَلِيْمٌ كَرِيْمٌ عَظِيْمٌ تُحِبُّ
الْعَفْوَ فَاعْفُ عَنِّيْ ط

யா அல்லாஹ், நிச்சயமாக எனக்கும் உனக்குமிடையே உள்ளவற்றில் பல கடமைகளும் எனக்கும் உன் படைப்புக ளுக்குமிடையே உள்ளவற்றில் பல கடமைகளும் என் மீது உனக்காக இருக்கின்றன. யா அல்லாஹ், அவற்றிலிருந்து உனக்காக உள்ளவற்றை எனக்கு நீ மன்னித்தருள்வாயாக! உன் படைப்புகளுக்காக உள்ளவற்றை என்னைத் தொட்டும் நீ சுமந்துக் கொள்வாயாக!

விசாலமான மன்னிப்புடையவனே, உன்னுடைய ஹலா லைக் கொண்டு உன்னுடைய ஹராமை விட்டும், உனக்கு வழிபடுவதைக் கொண்டு உனக்கு மாறு செய்வதை விட்டும், உன்னுடைய கருணையைக் கொண்டு உன்னைத் தவிர உள்ளவர்களை விட்டும் என்னை நீ தேவையறச் செய்வாயாக!

யா அல்லாஹ், நிச்சயமாக உன்னுடைய வீடு மகத்தா னது. உன்னுடைய உள்ளமை கண்ணியமானது. யா அல்லாஹ் நீயோ சாந்தமானவன்; கண்ணியமானவன்; மகத்தானவன். நீ மன்னிப்பதை விரும்புகிறாய். எனவே, என்னை நீ மன்னித் தருள்வாயாக!

ஏழாம் சுற்றில்

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ اِيْمَانًا كَامِلًا وَّ
يَقِيْنًا صَادِقًا وَّرِزْقًا وَّاسِعًا وَّقَلْبًا خَاشِعًا

نَصُوحًا وَّتَوْبَةً قَبْلَ الْمَوْتِ وَرَاحَةً عِنْدَ الْمَوْتِ وَمَغْفِرَةً وَّرَحْمَةً بَعْدَ الْمَوْتِ وَالْعَفْوَ عِنْدَ الْحِسَابِ وَالْفَوْزَ بِالْجَنَّةِ وَالنَّجَاةَ مِنَ النَّارِ بِرَحْمَتِكَ يَا عَزِيْزُ يَا غَفَّارُ رَبِّ زِدْنِيْ عِلْمًا وَّاَلْحِقْنِيْ بِالصَّالِحِيْنَ ۝

யா அல்லாஹ், யாவற்றையும் மிகைத்தவனே, அதிகம் மன்னிப்பவனே, நிச்சயமாக நான் பரிபூரணமான ஈமானையும் உண்மையான உறுதியையும் விசாலமான உணவையும் பயப் படும் இதயத்தையும் திக்ரு செய்யும் நாவையும் மணம் பொருந்திய ஹலாலான உணவையும் கலப்பற்ற தவ்பாவை யும் மரணத்திற்குப்பின் மன்னிப்பையும் ரஹ்மத்தையும் கேள்வி கணக்கின்போது மன்னிப்பையும் சொர்க்கத்தைக் கொண்டு வெற்றியையும் நரகத்தைவிட்டு ஈடேற்றத்தையும் உன்னுடைய அருளால் உன்னிடத்தில் நான் வேண்டுகிறேன். என்னுடைய இரட்சகனே, எனக்கு இல்மை அதிகப்படுத்துவா யாக! நல்லடியார்களுடன் என்னைச் சேர்த்தருள்வாயாக!

## தவாஃப் முடிந்த பின்னால்

தவாஃப் முடிந்த பின் வசதியிருந்தால் முல்தஜிம் என்னு மிடத்தில், வசதி இல்லையானால் கஃபாவின் முன் ஏதேனும் ஓரிடத்தில் நின்றுகொண்டு அச்சத்துடனும் தாழ்மையுடனும் பின்வருமாறு துஆ செய்ய வேண்டும். (முல்தஜிம் என்பது

ஹஜருல் அஸ்வதுக்கும் கஃபாவின் வாசலுக்குமிடையே உள்ள இடமாகும், அவ்விடத்தில் விசேஷமாக துஆ ஏற்கப் படும்)

## முல்தஜிம் துஆ

اَللّٰهُمَّ يَارَبَّ الْبَيْتِ الْعَتِيْقِ اَعْتِقْ
رِقَابَنَا وَرِقَابَ اٰبَآئِنَا وَاُمَّهَاتِنَا وَ
اِخْوَانِنَا وَاَوْلَادِنَا مِنَ النَّارِ ۞ يَاذَا الْجُوْدِ
وَالْكَرَمِ وَالْفَضْلِ وَالْمَنِّ وَالْعَطَآءِ وَالْاِحْسَانِ
اَللّٰهُمَّ اَحْسِنْ عَاقِبَتَنَا فِى الْاُمُوْرِ كُلِّهَا
وَاَجِرْنَا مِنْ خِزْىِ الدُّنْيَا وَعَذَابِ الْاٰخِرَةِ
اَللّٰهُمَّ اِنِّىْ عَبْدُكَ وَابْنُ عَبْدِكَ وَاقِفٌ
تَحْتَ بَابِكَ مُلْتَزِمٌ بِاَعْتَابِكَ مُتَذَلِّلٌ
بَيْنَ يَدَيْكَ اَرْجُوْ رَحْمَتَكَ وَاَخْشٰى
عَذَابَكَ مِنَ النَّارِ يَاقَدِيْمَ الْاِحْسَانِ ۞
اَللّٰهُمَّ اِنِّىْ اَسْئَلُكَ اَنْ تَرْفَعَ ذِكْرِىْ وَتَضَعَ وِزْرِىْ
وَتُصْلِحَ اَمْرِىْ وَتُطَهِّرَ قَلْبِىْ وَتُنَوِّرَ لِىْ

فِيْ قَبْرِيْ وَتَغْفِرَلِيْ ذَنْبِيْ وَاَسْئَلُكَ
الدَّرَجَاتِ الْعُلٰى مِنَ الْجَنَّةِ اٰمِيْنَ ۝

யா அல்லாஹ், உரிமைவிடப்பட்ட இவ்வீட்டின் இரட்சகனே! எங்களுடைய பிடரிகளையும் எங்களுடைய தந்தைமார்கள், எங்கள் தாய்மார்கள், எங்கள் சகோதரர்கள், எங்கள் மக்கள் ஆகியோருடைய பிடரிகளையும் நரக நெருப்பை விட்டும் நீ விடுதலை செய்வாயாக! கொடையும் தயாளமும் கருணையும் உபகாரமும் வெகுமதியும் பேருபகாரமும் உடையவனே! யா அல்லாஹ், எங்களின் முடிவை எல்லாக் காரியங்களிலும் அழகாக்கி வைத்து, உலகத்தின் கேவலத்தை விட்டும் மறுமையின் வேதனையை விட்டும் எங்களைக் காப்பாற்றுவாயாக! யா அல்லாஹ்! நிச்சயமாக நான் உன்னுடைய அடிமை, உன் அடிமையின் மகன், உன் (வீட்டின்) வாசலுக்குக்கீழ், உன் (வீட்டு) வாசற்படிகளைப் பற்றிப் பிடித்தவனாக, உன் முன்னால் தாழ்மையானவனாக நின்று கொண்டிருக்கிறேன். உன்னுடைய ரஹ்மத்தை நான் ஆதரவு வைத்து, உன்னுடைய நரகின் வேதனையை பயப்படுகிறேன். உபகாரம் செய்வதில் பூர்வீகமானவனே! யா அல்லாஹ், என்னுடைய நினைவை நீ உயர்த்த வேண்டுமென்றும், என் பாவத்தைப் போக்க வேண்டுமென்றும், என் காரியத்தை சீர்ப்படுத்த வேண்டுமென்றும், என் இதயத்தைப் பரிசுத்தப்படுத்த வேண்டுமென்றும், என் கப்ரில் எனக்கு ஒளியாக்கி வைக்க வேண்டுமென்றும், என் பாவத்தை எனக்கு நீ மன்னிக்க வேண்டுமென்றும் உன்னிடம் நான் வேண்டுகிறேன். இன்னும் சொர்க்கத்தில் உயர்ந்த பதவிகளையும் உன்னிடம் நான் வேண்டுகிறேன்.

''முல்தஜிமில் நின்று துஆ கேட்பது அவசியம். ஏதேனும் ஒரு தேவையுள்ளவர் அல்லது துன்பம் உடையவர் முல்தஜிமிலிருந்து துஆ கேட்டால் அல்லாஹு தஆலா அவருடைய தேவைகளை நிறைவேற்றி வைத்து, அவருடைய துன்பத்தை நீக்குவான்'' என்று ஒரு ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

பொருளடக்கம்

## தவாஃபின் தொழுகை

முல்தஜிமுடைய துஆவை முடித்துக் கொண்டு, மகாமெ இப்றாஹீமுக்கு எதிரில் இரண்டு ரக்அத் தவாஃபுடைய தொழுகை தொழ வேண்டும். அத்தொழுகை வாஜிபாகும். அதில் முதல் ரக்அத்தில் ஸூரத்துல் ஃபாத்திஹாவுக்குப்பின் குல் யா அய்யுஹல் காஃபிரூன் ஸூராவும், இரண்டாவது ரக்அத்தில் குல் ஹுவல்லாஹு ஸூராவும் ஓதவேண்டும். ஸலாம் கொடுத்தபின் மகாமெ இப்றாஹீமில் பின்வருமாறு பிரார்த்தனை செய்ய வேண்டும். மகாமே இப்றாஹீமுக்கு எதிரில் தொழ முடியவில்லையென்றால் மஸ்ஜிதின் எந்த இடத்தில் வேண்டுமானாலும் தொழலாம்.

### மகாமெ இப்றாஹீம் துஆ

اَللّٰهُمَّ اِنَّكَ تَعْلَمُ سِرِّىْ وَعَلَانِيَتِىْ
فَاقْبَلْ مَعْذِرَتِىْ وَتَعْلَمُ حَاجَتِىْ فَاَعْطِنِىْ
سُؤْلِىْ وَتَعْلَمُ مَا فِىْ نَفْسِىْ فَاغْفِرْلِىْ ذَنْبِىْ
اَللّٰهُمَّ اِنِّىْ اَسْئَلُكَ اِيْمَانًا يُبَاشِرُ قَلْبِىْ
وَيَقِيْنًا صَادِقًا حَتّٰى اَعْلَمَ اَنَّهٗ لَا يُصِيْبُنِىْ
اِلَّا مَا كَتَبْتَ لِىْ وَرِضًا بِمَا قَسَمْتَ لِىْ
اَنْتَ وَلِيِّىْ فِى الدُّنْيَا وَالْاٰخِرَةِ تَوَفَّنِىْ مُسْلِمًا
وَّاَلْحِقْنِىْ بِالصّٰلِحِيْنَ ۝ اَللّٰهُمَّ لَا تَدَعْ
لَنَا فِىْ مَقَامِنَا هٰذَا ذَنْبًا اِلَّا غَفَرْتَهٗ وَلَا

هَمًّا اِلَّا فَرَّجْتَهٗ وَلَا حَاجَةً اِلَّا قَضَيْتَهَا
وَيَسَّرْتَهَا فَيَسِّرْ اُمُوْرَنَا وَاشْرَحْ صُدُوْرَنَا
وَنَوِّرْ قُلُوْبَنَا وَاخْتِمْ بِالصَّالِحَاتِ اَعْمَالَنَا
اَللّٰهُمَّ تَوَفَّنَا مُسْلِمِيْنَ وَاَلْحِقْنَا بِالصَّالِحِيْنَ
غَيْرَ خَزَايَا وَلَا مَفْتُوْنِيْنَ اٰمِيْنَ يَا رَبَّ الْعَالَمِيْنَ

யா அல்லாஹ், நிச்சயமாக நீ என்னுடைய இரகசியத்தையும் பகிரங்கத்தையும் நன்கு அறிவாய்; எனவே, என்னுடைய மன்னிப்பை நீ ஏற்றுக் கொள்வாயாக! என்னுடைய தேவையை நீ அறிவாய்; ஆகவே, நான் கேட்பதை நீ தந்தருள்வாயாக! என் மனதிலுள்ளதையும் நீ அறிவாய்; ஆகையால், என் பாவங்களை எனக்கு மன்னிப்பாயாக! யா அல்லாஹ்! நீ எனக்கு விதியாக்கியதைத் தவிர (வேறு எதுவும்) எனக்கு ஏற்படாது என்று நான் அறிவதற்காக என் இதயத்தைச் சேர்ந்திருக்கும்படியான ஈமானையும் உண்மையான உறுதியையும் நிச்சயமாக உன்னிடத்தில் நான் வேண்டுகிறேன். நீ எனக்கு பங்கிட்டுக் கொடுத்ததைக் கொண்டு உன்னிலிருந்து திருப்தியையும் வேண்டுகிறேன். நீயே எனக்கு இவ்வுலகிலும் மறுமையிலும் உதவியாளன்; என்னை முஸ்லிமாக மரணமடையச் செய்து நல்லோர்களுடன் என்னைச் சேர்த்தருள்வாயாக! யா அல்லாஹ்! எங்களுடைய இந்த இடத்தில் எந்தப் பாவத்தையும் அதனை நீ மன்னிக்காமல், எந்தக் கவலையையும் அதனை நீ நீக்காமல், எந்தத் தேவையையும் அதனை நீ நிறைவேற்றாமல், அதனை இலேசாக்காமல் நீ விட்டு விடாதே. எனவே எங்களுடைய காரியங்களை இலேசாக்கி வைத்து எங்களுடைய நெஞ்சங்களை விரிவாக்கி வைத்து, எங்களின் உள்ளங்களை ஒளிமயமாக்கி வைத்து, எங்களுடைய

அமல்களை நற்செயல்களைக் கொண்டு முடிவாக்கி வைப்பா யாக! யா அல்லாஹ்! எங்களை முஸ்லிம்களாக மரணமடையச் செய்து, கேவலப்படாதவர்களாக குழப்பத்திலாக்கப்படாதவர் களாக நல்லோர்களுடன் எங்களைச் சேர்த்தருள்வாயாக! ஆமீன்! யா ரப்பல் ஆலமீன்.

## ஜம்ஜம் தண்ணீரின் சிறப்பு

தவாஃபுடைய தொழுகையை முடித்தபின் முடிந்த அள வுக்கு வயிறு நிரம்ப ஜம்ஜம் நீரைக் குடிக்க வேண்டும்.

இந்த நீரில் உலகின் மற்றெந்த நீரிலும் இல்லாத மூன்றுவிதச் சிறப்புகள் இருக்கின்றன. 1. தாகம் அடங்குகி றது. 2. உணவாக ஆகிறது. 3. மரணத்தைத் தவிர மற்றெல்லா நோய்களுக்கும் மருந்தாக இருக்கிறது. ''பூமியின் மீதுள்ள தண்ணீர்களில் மிகச் சிறந்தது ஜம்ஜம் நீராகும். அதில் சாப்பிடுவதற்குரிய உணவும் நோய்க்குரிய நிவாரணமும் இருக்கிறது'' என்று ஒரு ஹதீஸில் அருளப்பட்டுள்ளது.

(நூல்: தப்ரானி)

மற்றொரு ஹதீஸில், ''ஜம்ஜம் நீராகிறது, எந்த நோக்கத் திற்காகக் குடிக்கப்படுகிறதோ அதற்காகப் பலன் தருவதாயி ருக்கும்'' என்று அறிவிக்கப்பட்டுள்ளது!

## ஜம்ஜம் குடிக்கும் முறை

ஜம்ஜம் நீரை கிப்லாவை முன்னோக்கி நின்று குடிக்க வேண்டும். மூன்று முறை பிஸ்மில்லாஹ் சொல்லி மூன்று மூச்சில் குடிக்க வேண்டும். பிறகு நன் நோக்கங்களுக்காக விரும்பிய துஆவைக் கேட்க வேண்டும். ''நமக்கும் முனாஃபி குகளுக்கும் இடையில் வித்தியாசமாகிறது, அவர்கள் ஜம் ஜமை வயிறு நிரம்பக் குடிக்க மாட்டார்கள். நாம் வயிறு நிரம்பக் குடிக்க வேண்டும்'' என்று ஒரு ஹதீஸில் அருளப்பட் டுள்ளது.

பொருளடக்கம்

ஜம்ஜம் குடிக்கும்போது இந்த துஆவை ஓதவேண்டும்!

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ عِلْمًا نَّافِعًا وَّرِزْقًا وَّاسِعًا وَّشِفَآءً مِّنْ كُلِّ دَآءٍ ؕ

யா அல்லாஹ், நிச்சயமாக நான் பலன் தரும் கல்வியையும் தாராளமான உணவையும் எல்லா நோய்களிலிருந்து சுகத்தையும் உன்னிடத்தில் வேண்டுகிறேன்.

## ஸயீ செய்வதின் விளக்கம்

ஸஃபா மர்வா என்னும் இரு குன்றுகளுக்கிடையில் குறிப்பிட்ட ஒரு பாதையில் ஏழு தடவை போய் வருவதற்குப் பெயர் 'ஸயீ' என்று கூறப்படும்.

எந்தத் தவாஃபுக்குப் பிறகு ஸயீ செய்வது இருக்கிறதோ அந்தத் தவாஃபுடைய தொழுகை இரண்டு ரக்அத் வாஜிபைத் தொழுது விட்டு, ஹஜருல் அஸ்வதுக்கு வந்து, அதனை முத்தமிட்டபின் (பாபுஸ் ஸஃபா) ஸஃபாவுடைய வாசலின் வழியாக ஸஃபாவுக்கு வரவேண்டும். முதலில் வலது காலை வைத்து ஸஃபாவில் ஏறவேண்டும். அப்பொழுது பின்வரும் துஆவை ஓதவேண்டும்.

بِسْمِ اللّٰهِ وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰى رَسُوْلِ اللّٰهِ اَللّٰهُمَّ اغْفِرْلِيْ ذُنُوْبِيْ وَافْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ

அல்லாஹ்வின் திருநாமத்தால்... ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வின் தூதரின் மீது உண்டாவதாக! யா அல்லாஹ், என்னுடைய பாவங்களை எனக்கு மன்னித்து, உன்னுடைய ரஹ்மத்தின் வாசல்களை எனக்குத் திறந்து விடுவாயாக!

ஸஃபா மலையின் அருகில் செல்லும் பொழுது பின்வரும் வாசகத்தைக் கூற வேண்டும்.

أَبْدَأُ بِمَا بَدَأَ اللّٰهُ بِهِ إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللّٰهِ

எதைக் கொண்டு அல்லாஹ் ஆரம்பித்துள்ளானோ அதைக் கொண்டு நானும் ஆரம்பிக்கிறேன். அதாவது, ''நிச்சயமாக ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் அடையாளங்களில் உள்ளவையாகும்'' என்று அல்லாஹ் கூறியுள்ளான்.

இந்த ஆயத்தில் ஸஃபாவை முதலில் கூறியிருப்பதால் அதிலிருந்தே ஸயீயை ஆரம்பிக்க வேண்டும்.

பிறகு ஸஃபா மலையில் சற்று உயரம் வரை ஏறி, பைத்துல்லாஹ்வை முன்னோக்கி நின்று கொண்டு, இரு கைகளையும் துஆ கேட்பதுபோல் உயர்த்திக் கொண்டு, அல்லாஹ்வைப் புகழ்ந்து, பிறகு சப்தமிட்டு 'அல்லாஹு அக்பர்' என்று மூன்று தடவை கூறிய பிறகு, பின்வரும் வாசகத்தை ஒரு தடவை கூறவேண்டும்.

لَآ إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ
وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

பின்னர் மெதுவாக ஸலவாத்தைச் சொல்லிக் கொண்டு தனக்காகவும் தன் பெற்றோர், உற்றார், உறவினர், நண்பர்கள், மற்றும் முஸ்லிம்கள் அனைவருக்காகவும் துஆ கேட்க வேண்டும். ஏனெனில், அது ஏற்றுக் கொள்ளப்படும் இடமாகும்.

பிறகு ஸயீ உடைய நிய்யத்தைச் செய்து, 'ஸயீ'யை ஆரம்பிக்க வேண்டும். 'ஸயீ' உடைய நிய்யத்து:

اَللّٰهُمَّ اِنِّیْٓ اُرِیْدُ السَّعْیَ بَیْنَ الصَّفَا وَالْمَرْوَةِ سَبْعَةَ اَشْوَاطٍ لِوَجْهِكَ الْكَرِیْمِ فَیَسِّرْهُ لِیْ وَتَقَبَّلْهُ مِنِّیْ

யா அல்லாஹ்! உன்னுடைய சங்கைக்குரிய உள்ளமைக்காக ஸபா, மர்வாவுக்குக்கிடையில் ஏழு சுற்றுகள் ஸயீ செய்ய நாடுகிறேன். எனவே, இதனை எனக்கு நீ எளிதாக்கி வைத்து, இதனை என்னிலிருந்து ஏற்றுக் கொள்வாயாக!

இதனைத் தவிர விரும்புகின்ற வேறு துஆக்களையும் கேட்கலாம். தல்பிய்யாவையும் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும். சுமார் 25 ஆயத்துகள் ஓதுகின்ற நேர அளவு அவ்விடத்தில் இருக்கலாம். பிறகு பின்வரும் பிரார்த்தனையைச் செய்து கொண்டே மர்வாவை நோக்கிச் செல்ல வேண்டும்.

اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ وَلِلّٰهِ الْحَمْدُ ۝ اَلْحَمْدُ لِلّٰهِ عَلٰى مَآ اَلْهَمَنَا اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِیْ هَدَانَا لِهٰذَا وَمَا كُنَّا لِنَهْتَدِیَ لَوْلَآ اَنْ هَدَانَا اللّٰهُ ۝ لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا شَرِیْكَ لَهٗ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ یُحْیِیْ وَیُمِیْتُ وَهُوَ حَیٌّ لَا یَمُوْتُ بِیَدِهِ الْخَیْرُ وَهُوَ عَلٰى كُلِّ شَیْءٍ قَدِیْرٌ ۝ لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ وَصَدَقَ وَعْدَهٗ وَنَصَرَ عَبْدَهٗ وَاَعَزَّ جُنْدَهٗ وَهَزَمَ الْاَحْزَابَ وَحْدَهٗ ۝ لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَلَا نَعْبُدُ اِلَّآ اِیَّاهُ مُخْلِصِیْنَ لَهُ الدِّیْنَ وَلَوْ كَرِهَ الْكٰفِرُوْنَ ۝ اَللّٰهُمَّ

إِنَّكَ قُلْتَ "اُدْعُوْنِىْ أَسْتَجِبْ لَكُمْ" وَقَوْلُكَ الْحَقُّ وَإِنَّكَ
لَا تُخْلِفُ الْمِيْعَادَ، وَإِنِّىْ أَسْئَلُكَ كَمَا هَدَيْتَنِىْ لِلْإِسْلَامِ
أَنْ لَّا تَنْزِعَهُ مِنِّىْ حَتّٰى تَوَفَّانِىْ وَأَنَا مُسْلِمٌ، سُبْحَانَ اللهِ
وَالْحَمْدُ لِلّٰهِ وَلَآ إِلٰهَ إِلَّا اللهُ وَاللهُ أَكْبَرُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ
إِلَّا بِاللهِ الْعَلِيِّ الْعَظِيْمِ، اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا
مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ وَأَتْبَاعِهٖ إِلٰى يَوْمِ الدِّيْنِ
اَللّٰهُمَّ اغْفِرْلِىْ وَلِوَالِدَىَّ وَلِأَسَاتِيْذِىْ وَلِمَشَائِخِىْ
وَلِجَمِيْعِ الْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنٰتِ وَالْمُسْلِمِيْنَ وَالْمُسْلِمَاتِ
وَالسَّلَامُ عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

அல்லாஹ் மிகப்பெரியவன்; அல்லாஹ் மிகப்பெரியவன்; அல்லாஹ் மிகப் பெரியவன், அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். எங்களுக்கு நல்லவற்றை உதிப்பாக்கித் தந்ததற்காக புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே! எங்களுக்கு நேர்வழி காட்டிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! அல்லாஹ் எங்களுக்கு நேர்வழி காட்டியிருக்காவிட்டால் நாங்கள் நேர்வழி பெறுபவர்களாக ஆகியிருக்க மாட்டோம். அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு யாதோர் இணையுமில்லை. ஆட்சியனைத்

தும் அவனுக்கே! அவனுக்கே புகழனைத்தும். அவனே (அனைத்தையும்) உயிர்ப்பிக்கிறான்; அவனே (அனைத்தை யும்) மரணிக்கச் செய்கிறான். அவன் மரணமடையாத நித்திய ஜீவன். நன்மையெல்லாம் அவன் வசமே! அவன் எல்லாப் பொருட்களின் மீதும் சக்தி பெற்றவன்.

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எந்த நாயனும் இல்லை. அவன் தனித்தவன். அவன் தன்னுடைய வாக்கை உண்மையாக்கினான்; தன் அடியாருக்கு உதவி செய்தான்; தன்னுடைய படையினரை கண்ணியப்படுத்தி னான். அவன் தனிமையாகவே எதிரிப்படைகளைத் தோற்க டித்தான். அல்லாஹ்வைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு எந்த நாயனுமில்லை. அவனைத் தவிர (வேறு எதனையும்) நாங்கள் வணங்க மாட்டோம்; அவனுக்கே இந்த தீனைத் தூய்மையாக்கியவர்களாக இருக்கிறோம். காஃபிர்கள் வெறுத் தாலும் சரி!

யா அல்லாஹ்! ''என்னை நீங்கள் அழையுங்கள்; நான் உங்களுக்கு பதில் சொல்லுகிறேன்'' என்று நீ கூறியுள்ளாய்! உன்னுடைய சொல் உண்மையானதாயிருக்கும். நிச்சயமாக நீ வாக்கிற்கு மாறு செய்யமாட்டாய். எனக்கு இஸ்லாத்தின் பக்கம் நீ வழிகாட்டியது போன்றே, நான் முஸ்லிமாயிருக்கும் நிலையில் மரணமடையும் 'வரை அதை என்னைவிட்டு நீ நீக்கிவிடாமல் இருக்க வேண்டுமென உன்னிடம் நான் கேட்டுக் கொள்கிறேன்.

அல்லாஹ் மகாத்தூய்மையானவன்; எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியவை. அல்லாஹ்வைத் தவிர வேறு எந்த நாயனும் இல்லை; அல்லாஹ் மிகப் பெரியவன், பாவங்களை விட்டுத் திரும்புதலும் நன்மைகள் செய்யச் சக்தியும் உயர்வும் மகத்துவமும் மிக்க அல்லாஹ்வின் உதவி யைக் கொண்டே தவிர இல்லை.

யா அல்லாஹ், எங்களுடைய தலைவர் முஹம்மது ஸல்லல்லாஹு 'அலைஹி வஸல்லம் அவர்களின் மீதும்,

அன்னாரின் குடும்பத்தினர், தோழர்கள், அன்னாரைப் பின்பற்றியவர்கள் அனைவரின் மீதும் கியாமத்து நாள்வரை ஸலவாத்தும் ஸலாமும் அருள்வாயாக!

யா அல்லாஹ், என்னையும், என் பெற்றோரையும், என் சிசுகுமாரர்களையும், மற்றும் முஸ்லிமானவர்கள் அனைவரையும் நீ மன்னித்தருள்வாயாக! தூதர்களின் மீது ஸலாம் உண்டாவதாக! சர்வ உலக இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்.

## ஸயீயின் சுருக்கமான துஆ

ஸயீயில் இவ்வளவு பெரிய துஆவை ஓத முடியாதவர்கள் பின்வரும் மூன்று துஆக்களில் ஏதேனும் ஒன்றை ஓதிக் கொள்ளலாம்.

رَبَّنَا اغْفِرْلِي وَلِوَالِدَيَّ وَلِلْمُؤْمِنِيْنَ يَوْمَ يَقُوْمُ الْحِسَابُ

எங்களுடைய இரட்சகனே, எனக்கும் என்னுடைய பெற்றோருக்கும் முஃமின்களுக்கும் கேள்வி கணக்கின் நாளில் மன்னிப்பருள்வாயாக!

رَبِّ اغْفِرْ وَارْحَمْ اَنْتَ الْاَعَزُّ الْاَكْرَمُ

(என்னுடைய) இரட்சகனே! (என்னை) மன்னித்து கிருபை செய்வாயாக! நிச்சயமாக நீயே மிகுந்த கண்ணியமுள்ளவன்; சங்கைக்குரியவன்.

اَللّٰهُمَّ اِنِّيْۤ اَسْئَلُكَ الْعَفْوَ وَالْعَافِيَةَ
وَالْمُعَافَاةَ الدَّآئِمَةَ فِى الدِّيْنِ وَالدُّنْيَا وَالْاٰخِرَةِ
وَالْفَوْزَ بِالْجَنَّةِ وَالنَّجَاةَ مِنَ النَّارِ ؕ

யா அல்லாஹ், நிச்சயமாக நான் உன்னிடம் இம்மையி லும் மறுமையிலும் மன்னிப்பையும் சுகத்தையும் நிரந்தரமான நலத்தையும் சொர்க்கத்தையும் கொண்டு வெற்றியையும் நரகத்தை விட்டுப் பாதுகாப்பையும் வேண்டுகிறேன்.

மேற்கூறப்பட்ட மூன்று துஆக்களும் ஸயீயின் சுருக்க மான துஆக்கள். இவற்றில் ஏதேனும் ஒன்றை ஓதிக் கொள்ள லாம்.

மர்வா மலையை அடைந்து, ஸஃபாவின் மீது ஓதிய அதே துஆவை ஓதவேண்டும். ஸஃபாவிலிருந்து மர்வாவரை ஒரு சுற்று முடிகிறது. அதன்பிறகு மர்வாவிலிருந்து ஸஃபா வுக்கு வரவேண்டும். அப்பொழுது இரண்டாம் சுற்று முடிவ டையும். இவ்வாறே ஏழு சுற்றுகள் அதாவது: ஸஃபாவில் ஆரம்பித்து ஏழாவது சுற்றை மர்வாவில் முடிக்க வேண்டும். ஒவ்வொரு சுற்றிலும் மேற்கூறப்பட்ட துஆவை ஓதிக் கொள்ள வேண்டும்.

ஸஃபா மர்வாவுடைய பாதையில் ஸஃபாவிலிருந்து சற்று தூரம் சென்றவுடன் பச்சை நிறத் தூண்கள் இருக்கும். அந்த இடத்திற்கு 'மீலைனில் அக்லரைன்' என்று பெயர். இப்பொழுது அவ்விடத்தில் பச்சை நிற டியூப்லைட்டுகள் போடப்பட்டிருக்கின்றன. அது எரிந்து கொண்டே இருக்கும். ஸயீ செய்பவர் அவ்விடத்திற்குச் சென்றவுடன் சற்று வேகமாக நடக்க வேண்டும்; அது ஸுன்னத்தாகும். ஆனால் பெண்கள் சாதாரணமாகவே நடந்து செல்ல வேண்டும்; ஓடக்கூடாது.

ஸஃபாவிலிருந்து மர்வா வரையுள்ள இடத்தின் நீளம் 750, அல்லது 760 முழம் என்றும் அகலம் 33 முழம் என்றும் ஆலிம்கள் எழுதியுள்ளனர். ஏழு சுற்றுகளுக்கும் சுமார் 5250 முழங்கள் ஆகின்றன. இது மொத்தம் இரண்டரை கிலோ மீட்டர் தூரமாகும்.

ஸஃபா மலையின்மீது முதலில் நின்று ஸயீயை ஆரம்பிக் கும்பொழுது, "இந்த இடத்தில்தான் ஹாஜரா (அலை ஹஸ்ஸ லாம்) அவர்கள் குழந்தை இஸ்மாயீல் (அலை) அவர்களுக்கா

 

கத் தண்ணீர் தேடுகின்ற விஷயத்தில் ஏழு தடவை இவ்வி ரண்டு மலைகளுக்கிடையே ஓடினார்கள்; ஏழாவது சுற்றில் தான் ஜம்ஜம் தண்ணீராகிறது தோன்றியது'' என்ற சரித்திரத் தின் நினைவாகிறது ஒவ்வொரு மனிதருக்கும் ஏற்பட வேண் டும்.

பரக்கத்துடைய அந்த நீரூற்றாகிறது, இப்பொழுது ஹரமு டைய முற்ற வெளியில் இருக்கிறது. ஹஜ்ரீ 1399ல் தவாஃப் செய்யுமிடத்தை விசாலப்படுத்தும் பொழுது அக்கிணற்றுக்கு மேலே தளம் அமைத்து, அது வெளியே தெரியாமல் மூடி குழாய்களின் வழியாக ஜம்ஜம் நீர் ஹாஜிகளுக்குக் கிடைப்ப தற்கு வசதி செய்யப்பட்டுள்ளது. இதனால் ஹாஜிகளுக்கு பெரும் சௌகரியம் ஏற்பட்டுள்ளது; பிறகு ஹிஜ்ரீ 1402ஆம் ஆண்டு அக்கிணற்றுக்குச் செல்வதற்குப் படிகள் கட்டப்பட்டு கீழ்ப்பக்கம் சென்று வருவதற்குரிய வசதி செய்யப்பட்டுள்ளது.

ஸயீ செய்தபின், உம்ராவுக்கும் ஹஜ்ஜுக்கும் சேர்த்து இஹ்ராம் கட்டிய காரின் இஹ்ராமுடன் அப்படியே இருக்க வேண்டும்; தலைமுடியைச் சிரைப்பதோ, வெட்டுவதோ கூடாது. தமத்துஃ இஹ்ராம் கட்டியவர் முடியைக் களைந்து இஹ்ராமிலிருந்து நீங்கி வழக்கமான ஆடைகளை அணிந்து கொள்வார். இஹ்ராமினால் அவருக்கு ஹராமாயிருந்த விஷ யங்களெல்லாம் இப்பொழுது ஹலாலாக ஆகிவிடும். பிறகு அவர் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டும்வரை சுதந்திரமாக இருப்பார். விரும்பினால் மறுபடியும் அவர் உம்ராச் செய்ய லாம். அதாவது: தன்ஈம் என்ற இடத்திற்குச் சென்று இஹ்ராம் கட்டிக் கொண்டு வந்து உம்ராவை நிறைவேற்ற வேண்டும்.

## 'ஸயீ'யின் சில சட்டங்கள்

1. ஸயீ என்பது ஸஃபா, மர்வாவுக்கு இடையில் ஏழு தடவை சுற்றுவதாகும். ஸஃபாவிலிருந்து மர்வாவுக்குச் சென் றால் ஒரு சுற்றாகும். பிறகு மர்வாவிலிருந்து ஸஃபா வரை

இரண்டாவது சுற்றாகும். இவ்வாறு ஏழு சுற்றுகள் முடிக்கப் பட வேண்டும்.

2. ஸயீயை ஸஃபாவிலிருந்து ஆரம்பித்து மர்வாவில் முடிப்பது வாஜிபாகும்.

3. ஸயீ உடைய ஏழு சுற்றுகளையும் தொடராகச் செய் வது ஸுன்னத்தாகும்.

4. வயோதிகமானவர், அல்லது நோயாளி, அல்லது பெண்கள் தொடர்ந்து ஸயீ செய்ய முடியாதவர்களாக இருந் தால் ஒவ்வொரு சுற்றாக, அல்லது இரண்டிரண்டு சுற்றுக்க ளாக பல தடவைகளில் செய்து கொள்வது ஆகும். இன்னும் எவரேனும் கடினமான நோயாளியாக இருந்தால் ஒரு நாளைக்கு ஒரு சுற்று வீதம் ஏழு நாட்களுக்கு ஏழு சுற்றுகளைச் செய்து முடிப்பதும் கூடும்; அதுவும் ஸயீ என்பதாகவே கூறப்படும்.

## ஹஜ்ஜின் முறை

முன்னால் இஹ்ராமுடைய விளக்கத்தில் ஹஜ்ஜுடைய மூன்று வகைகள் கூறப்பட்டுள்ளன. இஃப்ராத், கிரான், தமத்துஃ ஆகிய மூன்றாகும். இம்மூன்று வகைகளையும் சுருக்கமான முறையில் இங்கு இப்பொழுது கூறப்படுகிறது. ஹஜ்ஜுடைய நேரத்தில் இம்முறைகளை நினைவில் வைத்துக் கொண்டால் இன்ஷா அல்லாஹ் மிக எளிதாக இருக்கும்.

## தமத்துஃ விளக்கம்

தமத்துஃ என்றால் சுகம்பெறுதல் என்பது அர்த்தமாகும். அதாவது: உம்ரா செய்து முடித்து, இஹ்ராமைக் களைந்து சில தினங்கள் ஓய்வெடுத்துக் கொண்டபின் மீண்டும் இஹ் ராம் அணிந்து ஹஜ்ஜு செய்வதால் இதற்குப் பெயர் தமத்துஃ என்று கூறப்பட்டுள்ளது.

கப்பலிலோ விமானத்திலோ செல்லுகின்ற பெரும்பாலான ஹாஜிகள் பல தினங்கள் தங்கிய பின் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டவேண்டியிருப்பதால் தமத்துஃ உடைய இஹ்ராம் கட்டிக் கொள்ள வேண்டும். பிறகு மக்காவுக்குச் சென்று தவாஃப் செய்து பிறகு ஸயீ செய்து, பிறகு தலைமுடியைச் சிரைத்து அல்லது கத்தரித்து குளித்தபின் இஹ்ராம் களைந்து வழக்கமான உடையை அணிந்து கொள்வார். இப்பொழுது உம்ரா நிறைவேறிவிட்டது.

உம்ராவுடைய இஹ்ராமைக் களைந்த பின் ஹரம்ஷரீஃபில் ஜமாஅத்துடன் தொழுகையை நிறைவேற்றுவதில் கவனத்துடன் இருந்து வரவேண்டும். ஏனெனில், அவ்விடத்தில் தொழுவது மற்ற மஸ்ஜிதுகளில் தொழுவதைவிட ஓர் இலட்சம் மடங்கு அதிக நன்மை உடையதாகும். உலகத்தின் எவ்வளவு பெரிய நிஃமத்தும் இதற்கு நிகராக ஆகிட முடியாது. பர்ளு தொழுகையை நிறைவேற்றிய பின் நமக்கு சக்தியுள்ள அளவு நேரங்கிடைக்கும் போதெல்லாம் அதிகமாக தவாஃப் செய்து கொண்டே இருக்க வேண்டும். ஏனெனில், தவாஃப் என்பது அவ்விடத்தில் தவிர உலகில் வேறெங்கும் செய்யமுடியாத இபாதத் ஆகும். தவாஃபைத் தவிர திருக்குர்ஆன் ஓதுதல், ஸலவாத்து சொல்லுதல் போன்ற வேறு பல நல்ல காரியங்களையும் செய்து கொண்டே இருக்க வேண்டும்.

ஹஜ்ஜு செய்வதற்கு இன்னும் அதிகமான தினங்கள் இருந்தால் முன்னதாக மதீனாவிற்குச் சென்று, அங்கு நாற்பது நேரத் தொழுகைகளை ஜமாஅத்துடன் நிறைவேற்றி விட்டு, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ரவ்ளா ஷரீஃபை ஜியாரத் செய்தபின் ஹஜ்ஜுக்கு முன் மக்காவிற்குத் திரும்பிவிட வேண்டும். மதீனாவிலிருந்து மக்காவிற்கு வரும்பொழுது மீகாத்தில் இஹ்ராம் கட்டிக் கொண்டு வரவேண்டும். ஹஜ்ஜுக்கு அதிக நாட்கள் இருந்தால் உம்ராவுக்காக இஹ்ராம் கட்டிக் கொண்டு வரவேண்டும். அல்லது குறுகிய நாட்கள் இருந்தால் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டிக் கொண்டு வரவேண்டும்.

உம்ராவை நிறைவேற்றியபின் மக்காவில் தங்கியிருக்கும் ஹாஜி, துல் ஹஜ் பிறை எட்டு அன்று ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்ட வேண்டும்! ஹஜ்ஜெ தமத்துஃ உடைய பின்வரும் விளக்க அட்டவணையை நன்றாக கவனித்துக் கொள்ளவும்.

## ஹஜ்ஜெ தமத்துஃ விளக்க அட்டவணை

| | | |
|---|---|---|
| 1. | உம்ராவுக்கு இஹ்ராம் கட்டுதல் | ஷரத்து |
| 2. | உம்ராவுடைய தவாஃப் (இதில் இள்திபாவும் ரமலும் சுன்னத்து) | ருக்னு |
| 3. | உம்ராவுடைய ஸயீ | வாஜிப் |
| 4. | தலை முழுவதையும் சிரைத்தல், அல்லது சிலதை கத்தரித்தல் | வாஜிப் |
| 5. | ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டுதல், துல் ஹஜ் பிறை 8-ல் | ஷரத்து |
| 6. | அரஃபாவில் தங்குதல் | ருக்னு |
| 7. | அரஃபாவிற்குப் பின் முஜ்தலிஃபாவில் தங்குதல் | வாஜிப் |
| 8. | துல் ஹஜ் 10-ல் கடைசி ஜம்ராவிற்குக் கல்லெறிதல் | வாஜிப் |
| 9. | குர்பானீ கொடுத்தல் | வாஜிப் |
| 10. | தலைமுடி எடுத்தல் | வாஜிப் |
| 11. | தவாஃபுஜ் ஜியாரத் செய்தல் | ருக்னு |

பொருளடக்கம்

| | |
|---|---|
| 12. ஸயீ செய்தல் | வாஜிப் |
| 13. பிறை 11, 12 மூன்று ஜம்ராக்களிலும் கல் லெறிதல் | வாஜிப் |
| 14. தவாஃபுல் விதாஃ செய்தல் | வாஜிப் |

குறிப்பு: ஷரத்து என்பது வெளி ஃபர்ளு
ருக்னு என்பது உள் ஃபர்ளு

## ஹஜ்ஜெ இஃப்ராத் விளக்கம்

இஃப்ராத் என்பதின் பொருள் ஹஜ்ஜு மட்டும் செய்தல் என்பதாகும். கிரானுடைய நிய்யத்தோ, தமத்துஃ உடைய நிய்யத்தோ இல்லாமலிருப்பதுமாகும்.

ஹஜ்ஜு செய்ய நாடுகிறவர் முதலில் எல்லையிலிருந்து (மீகாத்திலிருந்து) இஹ்ராம் கட்டிக் கொள்ள வேண்டும். இஹ்ராம் கட்டுவதற்கு முன் முடிகளைக் களைந்து, குளித்து நன்றாக சுத்தமாகிக் கொள்ள வேண்டும். பிறகு இஹ்ராம் கட்டிக் கொண்டு தலையை மறைத்து இரண்டு ரக்அத் இஹ்ராமுடைய நஃபில் தொழவேண்டும்; தொழுது முடித்து கிப்லாவை முன்னோக்கியவாறே உட்கார்ந்து தலையிலிருக் கும் துணியை எடுத்துவிட்டு, நிய்யத்து செய்ய வேண்டும். நிய்யத்தாவது:

اَللّٰهُمَّ اِنِّيْٓ اُرِيْدُ الْحَجَّ فَيَسِّرْهُ لِيْ وَتَقَبَّلْهُ مِنِّيْ

யா அல்லாஹ், நான் ஹஜ்ஜு செய்வதை நாடுகிறேன். அதனை எனக்கு இலேசாக்கி வைத்து, என்னிடமிருந்து அதனை ஏற்றுக் கொள்வாயாக!

இதற்குப்பின் தல்பிய்யா சொல்ல வேண்டும். நிய்யத்து செய்தபின் இஹ்ராம் கட்டப்பட்டு விட்டது. எனவே, எல்லா நிலைகளிலும் தலையைத் திறந்தே வைத்திருக்க வேண்டும். அதிகமாக தல்பிய்யா சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும். இஹ்ராமில் தடுக்கப்பட்டவற்றை முற்றிலும் தவிர்த்திருக்க வேண்டும். இஹ்ராமுடைய ஒழுக்கங்களை முற்றிலும் கடைப்பிடிக்க வேண்டும். இந்த இஃப்ராதுடைய இஹ்ராமை ஹஜ்ஜுடைய செயல்களை முடித்தபின் களைய வேண்டும்.

முஃப்ரிதான இவர் மக்காவை அடைந்து தவாஃபுல் குதூம் என்னும் தவாஃபை நிறைவேற்ற வேண்டும். ஃபர்ளு தொழுகையின் நேரமாக இருந்தால், முதலில் தொழுகையை நிறைவேற்றிய பிறகுதான் தவாஃப் செய்ய வேண்டும். தவாஃபுல் குதூமுக்குப் பின் ஸயீ செய்ய வேண்டுமென்ற எண்ணமிருந்தால் — அதாவது: ஹஜ்ஜுடைய வாஜிபான ஸயீயை முற்கூட்டியே செய்து வைத்துக் கொள்ள வேண்டுமென்று விரும்பினால் தவாஃபில் ரமல், இள்திபாஃ இரண்டும் செய்யவேண்டும். பிறகு ஸஃபா வாசல் வழியாக வந்து ஸயீ செய்து முடித்தபின் இஹ்ராம் கட்டியவராக மக்காவில் தங்கி இருக்கவேண்டும். அதாவது: ஸயீ செய்த பின் முடியை களைந்துவிடக்கூடாது. பிறகு துல் ஹஜ் எட்டாம் நாள் அதே இஹ்ராமுடன் மினாவுக்குச் செல்ல வேண்டும். அங்கு பின்வரும் அட்டவணைப்படி ஹஜ்ஜை நிறைவேற்ற வேண்டும்.

## ஹஜ்ஜெ இஃப்ராத் விளக்க அட்டவணை

| | | |
|---|---|---|
| 1. | இஹ்ராம் கட்டுதல் | ஷரத்து |
| 2. | தவாஃபுல் குதூம் செய்வது | சுன்னத்து |
| 3. | அரஃபாவில் தங்குதல் | ருக்னு |

| | |
|---|---|
| 4. முஜ்தலிஃபாவில் தங்குதல் | வாஜிப் |
| 5. துல்ஹஜ் 10, கடைசி ஜம்ரா கல்லெறிதல் | வாஜிப் |
| 6. தலைமுடி முழுவதையும் சிரைத்தல், அல்லது சிலதை கத்தரித்தல் | வாஜிப் |
| 7. தவாஃபுஜ் ஜியாரத் செய்வது | ருக்னு |
| 8. ஸயீ செய்தல் | வாஜிப் |
| 9. 11, 12, இருதினங்கள் மூன்று ஜம்ராக்களி லும் கல்லெறிதல் | வாஜிப் |
| 10. தவாஃபுல் விதாஃ செய்வது | வாஜிப் |

ஹஜ்ஜெ இஃப்ராத் உடைய இவர் மீது குர்பானீ செய்வது வாஜிபல்ல. விரும்பினால் செய்யலாம்; முஸ்தஹப்பாகும்.

## ஹஜ்ஜெ கிரான் விளக்கம்

உம்ராவிற்கும் ஹஜ்ஜிற்கும் சேர்த்து இஹ்ராம் கட்டுவதற் குப் பெயர் கிரான் எனப்படும். இது ஹஜ்ஜுடைய மூன்று வகைகளிலும் மிகச் சிறந்ததாகும். ரஸூலுல்லாஹி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹஜ்ஜத்துல் விதாஃ வின் போது துல் ஹுலைபா என்ற இடத்திலிருந்து கிரான் உடைய இஹ்ராமைத்தான் அணிந்தார்கள். ஹனஃபீ மத்ஹ பில் ஹஜ்ஜின் மற்ற இரண்டு வகைகளை விட கிரான் என்பதுதான் மிகச் சிறந்தது என்று கூறப்பட்டுள்ளது.

இதற்கும் ஹஜ்ஜுடைய மாதங்களில் மீகாத் எனும் எல்லையிலிருந்து இஹ்ராம் கட்டவேண்டும். பின்வருமாறு நிய்யத்து செய்து தல்பிய்யாவையும் சேர்த்து ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ إِنِّيْ أُرِيْدُ الْعُمْرَةَ وَالْحَجَّ فَيَسِّرْهُمَا لِيْ وَتَقَبَّلْهُمَا
مِنِّيْ لَبَّيْكَ اللّٰهُمَّ لَبَّيْكَ لَبَّيْكَ لَاشَرِيْكَ لَكَ لَبَّيْكَ
إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَاشَرِيْكَ لَكَ

யா அல்லாஹ், நான் உம்ராவையும் ஹஜ்ஜையும் நாடுகி றேன். அவ்விரண்டையும் எனக்கு இலேசாக்கி அவ்விரண்டை யும் என்னிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக!

ஹஜ்ஜுடைய மாதங்கள் என்பது ஷவ்வால், துல்கஃதா, துல் ஹஜ்ஜுடைய எட்டாம் நாள் வரையுள்ள காலம் ஆகியவையாகும். எனவே, ஷவ்வால் மாதத்திற்குமுன் இஹ்ர ராம் கட்டுவது மக்ரூஹ் தஹ்ரீமாகும்.

கிரானுடைய இஹ்ராம் கட்டியவர் மக்காவிற்குச் சென்று முதலில் தவாஃப் செய்யவேண்டும். அதில் ரமல் இள்திபாஃ இரண்டையும் நிறைவேற்ற வேண்டும். பிறகு தவாஃபுடைய இரண்டு ரக்அத்து நஃபில் தொழவேண்டும். பிறகு ஜம்ஜம் தண்ணீர் குடித்துவிட்டு, ஹஜருல் அஸ்வதை முத்தமிட்டபின் ஸஃபா வாசல் வழியாக (அல்லது வேறு ஏதேனும் ஒரு வழியாக)ச் சென்று ஸஃபா — மர்வாவுக்கிடையே உம்ராவு டைய நிய்யத்தில் ஸயீ செய்யவேண்டும். ஸயீ செய்தபின் உம்ரா முடிந்தது. ஆனால், முடி எடுத்து விடக்கூடாது. அவ்வாறு எடுத்தால் (இது ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும் சேர்த்துக் கட்டிய இஹ்ராமாக இருப்பதால்) இரண்டு 'தமு' கொடுக்க வேண்டியது அவசியமாகிவிடும்.

துல்ஹஜ்ஜு எட்டாம் நாள் மினாவுக்குப் புறப்படும் முன் தவாஃபுல் குதூமை நிறைவேற்ற வேண்டும். அவ்வாறு தவாஃபுல் குதூம் செய்பவர், ஹஜ்ஜுக்குரிய ஸயீயை அப் பொழுதே செய்து கொள்வது நல்லது. அவ்வாறு ஸயீ செய்ய வேண்டுமென்ற எண்ணம் ஏற்படும் பொழுது தவாஃபில் ரமல், இள்திபாஃ இரண்டையும் நிறைவேற்றிவிட வேண் டும். அல்லது இந்த தவாஃபுல் குதூமுக்குப் பிறகு ஸயீ

செய்ய வேண்டுமென்ற எண்ணமில்லையானால் (அதாவது: தவாஃபுஜ் ஜியாரத்திற்குப் பின் அதனைச் செய்து கொள்ள லாம் என்ற நிய்யத்து இருந்தால்) தவாஃபில் ரமல், இள்திபாஃ செய்ய வேண்டிய அவசியமில்லை.

## குர்பானீ செய்ய முடியாவிட்டால்...

கிரான், தமத்துஃ ஆகிய இரண்டு முறையில் ஹஜ்ஜு செய்கிறவர்கள் ஹஜ்ஜு முடிந்தபின் குர்பானீ கொடுப்பது வாஜிபாகும். கிரான் உடைய ஹஜ்ஜு செய்கின்ற காரின் என்பவரிடத்தில், அல்லது தமத்துஃ உடைய ஹஜ்ஜு செய் கின்ற முதமத்திஃ என்பவரிடத்தில், குர்பானீ பிராணி வாங்கி அறுப்பதற்குரிய பொருள் வசதி இல்லையானால், அல்லது குர்பானீ பிராணியை வாங்கினால் திரும்ப வீடுவரை போய்ச் சேருவதற்கு பொருள் குறைந்து விடும் என்ற நிலையிருந்தால், அல்லது குர்பானீ பிராணி கிடைக்கவில்லையானால், இவ்வி தச் சூழ்நிலைகளில் அதற்கு பதிலாக பத்து நோன்புகள் வைக்க வேண்டும். ஹஜ்ஜுடைய மாதத்தில் (மக்காவிலேயே) மூன்று நோன்புகளும் ஊர் திரும்பிய பின் ஏழு நோன்புகளும் வைக்கப்பட வேண்டும். இச்சட்டத்தை அல்லாஹுதஆலா பின்வரும் ஆயத்தில் குறிப்பிடுகிறான்.

''எவரொருவர் (குர்பானீயைப்) பெற்றுக் கொள்ளவில் லையானால், ஹஜ்ஜில் மூன்று தினங்கள் நோன்பு வைப்பதும் (வீட்டிற்குத்) திரும்பியதும் ஏழு நோன்புகள் வைப்பதும் அவசியமாகும். இவை பரிபூரணமான பத்தாகும்''

— *அல்குர்ஆன் 2:196*

இந்த நோன்புகளை வைப்பதற்கு ஐந்து ஷரத்துகள் இருக்கின்றன.

1. ஹஜ்ஜுக்காக — உம்ராவுக்காக இஹ்ராம் கட்டிய பின் (மேற்கூறப்பட்ட முறையில் குர்பானீ கொடுக்க முடியாத போது) இந்த நோன்புகளை வைக்க வேண்டும். இஹ்ராம் கட்டுவதற்கு முன் வைத்தால் செல்லாது.

2. மூன்று நோன்புகளை ஹஜ்ஜுடைய மாதத்தில் வைக்க வேண்டும்.

3. துல்ஹஜ் 10க்கு முன்னதாக இந்த மூன்று நோன்புகளை வைத்துவிட வேண்டும்.

4. இந்த நோன்புகளுக்குரிய நிய்யத்து இரவிலேயே ஏற்பட்டு விட வேண்டும்.

5. குர்பானீ செய்வதற்குரிய கடைசி நாளான துல்ஹஜ்ஜு 12-ஆம் நாள் வரை குர்பானீ செய்ய முடியாத சூழ்நிலை இருக்க வேண்டும். மீதி ஏழு நோன்புகளை ஊர் திரும்பிய பின் வைக்க வேண்டும்.

## "ஹஜ்ஜெ கிரான்" விளக்க அட்டவணை

| | | |
|---|---|---|
| 1. | ஹஜ்ஜு, உம்ரா இரண்டிற்கும் சேர்த்து இஹ்ராம் கட்டுதல் | ஷரத்து |
| 2. | உம்ராவுடைய தவாஃப் (இதில் இள்திபாவும் ரமலும் ஸுன்னத்து) | ருக்னு |
| 3. | உம்ராவுடைய ஸயீ | வாஜிப் |
| 4. | தவாஃபுல் குதூம் (இதில் ரமலும் இள்திபாவும் ஸுன்னத்து) | ஸுன்னத்து |
| 5. | ஸயீ செய்தல் (ஹஜ்ஜுக்கு முன்) | வாஜிப் |
| 6. | அரஃபாவில் தங்குதல் | ருக்னு |
| 7. | முஜ்தலிஃபாவில் தங்குதல் | வாஜிப் |

| | | |
|---|---|---|
| 8. | பிறை 10-ல் கடைசி ஜம்ராவிற்குக் கல்லெறிதல் | வாஜிப் |
| 9. | குர்பானீ | வாஜிப் |
| 10. | தலைமுடி முழுவதையும் சிரைத்தல், அல்லது கத்தரித்தல் | வாஜிப் |
| 11. | தவாஃபுஜ் ஜியாரத் | ருக்னு |
| 12. | பிறை 11, 12-ல் மூன்று ஜம்ராக்களிலும் கல்லெறிதல் | வாஜிப் |
| 13. | தவாஃபுல் விதாஃ | வாஜிப் |

காரினாகிறவர் தவாஃபுல் குதூம் செய்தபின் — ஹஜ்ஜுடைய வாஜிபின் ஸயீயை ஹஜ்ஜுக்கு முன்னதாகவே செய்வது சிறப்பாகும். அவ்வாறு ஹஜ்ஜுக்குமுன் — தவாஃபுல் குதூமுக்குப் பின் — ஸயீ செய்யும் நிய்யத்து இல்லையானால் தவாஃபில் ரமல், இள்திபாஃ செய்யக்கூடாது.

## ஹஜ்ஜின் பர்ளுகள்

துல் ஹஜ் பிறை 8, 9, 10, 11, 12 ஆகிய ஐந்து நாட்கள் ஹஜ்ஜுடைய நாட்களாகும். இந்த ஐந்து நாட்களுடைய நிகழ்ச்சிகளை முறையாகத் தெரிந்து கொள்வதற்கு முன், ஹஜ்ஜுடைய ஃபர்ளுகள், வாஜிபுகள் ஆகியவற்றை நல்லமுறையில் மனதில் பதிய வைத்துக் கொள்ளுதல் அவசியமாகும்.

ஹஜ்ஜுடைய பர்ளுகள் மூன்று, முதலாவது: இஹ்ராம் கட்டி ஹஜ்ஜுடைய நிய்யத்து செய்து, தல்பிய்யா கூறுவது. இரண்டாவது: துல் ஹஜ் ஒன்பதாம் நாள் ஜவாலுக்குப் பிறகு பத்தாம் நாள் ஸுபுஹ் ஸாதிக் வரையுள்ள ஏதேனும் ஒரு நேரத்தில் — அது சற்று நேரமாக இருப்பினும் — அரஃபா

மைதானத்தில் தங்குதல். மூன்றாவது: தவாஃப் ஜியாரத் செய்தல். இதற்குரிய நேரம் துல் ஹஜ் பத்தாம் நாள் ஸுப்ஹு ஸாதிக் நேரத்திற்குப் பிறகு பன்னிரண்டாம் நாள் சூரியன் மறையும் வரையுள்ள நேரமாகும். இந்தத் தவாஃபை தலை முடி களைந்த பின்னர் செய்ய வேண்டும்.

குறிப்பு: இந்த மூன்று ஃபர்ளுகளில் ஏதேனும் ஒன்று விடப்பட்டு விட்டாலும் ஹஜ்ஜு நிறைவேறாது.

## ஹஜ்ஜின் வாஜிபுகள்

ஹஜ்ஜுடைய வாஜிபுகள் ஆறு. 1. அரஃபாவிற்குப் பிறகு முஜ்தலிஃபாவில் தங்குதல். 2. ஸஃபா, மர்வாவுக்கிடையே ஸயீ செய்தல். 3. மினாவில் ஜம்ராத்துகளில் கல்லெறிதல். 4. காரின், முதமத்திஃ இருவரும் குர்பானீ கொடுத்தல். 5. குர்பானீ கொடுத்த பிறகு தலைமுடியைச் சிரைத்தல் அல்லது கத்தரித்தல். 6. மக்காவாசிகள் அல்லாதவர்கள் தவாஃபுல் விதாஃ செய்தல்.

குறிப்பு: — வாஜிபுகளில் ஏதேனும் ஒன்று விடுபட்டு விட்டால் ஹஜ்ஜு நிறைவேறிவிடும். ஆனால், அதற்குரிய நஷ்ட ஈட்டை நிறைவேற்றுதல் அவசியமாகும். அதாவது: தமு என்னும் ஓர் ஆடறுத்து குர்பானீ கொடுத்தல் அவசியமாகும்.

## ஹஜ்ஜின் ஐந்து நாள்கள்

முதலாம் நாள் (துல் ஹஜ் பிறை 8) நிகழ்ச்சிகள்:

உம்ராவுக்கு இஹ்ராம் கட்டி, உம்ரா செய்து முடித்து இஹ்ராமைக் களைந்து விட்டிருப்பவர், துல்ஹஜ் எட்டாம் நாள் மக்காவிலேயே ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டிக் கொள்ள வேண்டும். தலையை மூடியவாறு இஹ்ராமுடைய நஃபில் இரண்டு ரக்அத்துகள் தொழுது கொள்ள வேண்டும். ஸலாம் கொடுத்தபின் தலையிலிருக்கும் துணியை எடுத்து விட்டு நிய்யத்து செய்ய வேண்டும்.

اَللّٰهُمَّ اِنِّيْٓ اُرِيْدُ الْحَجَّ فَيَسِّرْهُ لِيْ وَتَقَبَّلْهُ مِنِّيْ

அல்லாஹும்ம இன்னீ உரீதுல் ஹஜ்ஜ ஃபயஸ்ஸிர்ஹு லீ வதகப்பல்ஹு மின்னீ

யா அல்லாஹ், நான் ஹஜ்ஜை நாடுகிறேன், எனவே அதனை எனக்கு இலேசாக்கி வைத்து, அதனை என்னிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக!

பிறகு மூன்று முறை சப்தமிட்டு தல்பிய்யா சொல்ல வேண்டும். பெண்கள் மெதுவாகச் சொல்ல வேண்டும். ஹஜ்ஜுடைய இந்த இஹ்ராமுக்குப் பிறகு தல்பிய்யாவை அதிகமாகச் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும்.

பிறை 8-ல், இஹ்ராம் கட்டியபின் ஹஜ்ஜுடைய ஸயீயை அப்பொழுதே — முன்னதாகவே — செய்துவிட வேண்டுமென்ற எண்ணமிருந்தால், ஒரு தவாஃப் செய்து பிறகு ஸயீ செய்து கொள்ள வேண்டும். அந்த தவாஃபில் ரமல் இள்திபாஃ செய்ய வேண்டும். இவ்வாறு ஸயீயை முன்னால் செய்வது காரினுக்குச் சிறப்பாகும். முஃப்ரித், முதமத்திஃ இருவரும் ஹஜ்ஜுக்குப் பிறகு செய்வதுதான் சிறப்பாகும்.

பிறகு சூரியன் உதயமான பின் மக்காவிலிருந்து மினாவிற்குப் புறப்பட வேண்டும். வழியில் தல்பிய்யா, ஸலவாத்து, திக்ருகள் ஆகியவற்றைச் சொல்லிக் கொண்டே செல்ல வேண்டும்.

1. துல் ஹஜ் எட்டாம் நாள் மினாவில் மூன்று காரியங்கள் ஸுன்னத்தாகும். அன்று ளுஹர், அஸ்ர், மஃரிப், இஷா, ஒன்பதாம் நாள் ஃபஜ்ரு ஆகிய ஐந்து நேரங்களின் தொழுகைகளையும் மினாவில் தொழுவது.

2. அன்று இரவு மினாவில் தங்குவது.

3. துல் ஹஜ் ஒன்பதாம் நாள் சூரியன் உதயமான பின் மினாவிலிருந்து அரஃபாவிற்கு ஹஜ்ஜுக்காகப் புறப்படுவது.

## ஒரு முக்கியக் குறிப்பு

துல்ஹஜ் பிறை 8, 9, 10, 11, 12 ஆகிய ஐந்து நாட்களின் இரவுகள் கடந்துவிட்ட பகலின் கணக்கில் சேர்ந்ததாகும். அதாவது: எட்டாம் நாள் பகல் சென்ற பின் வருகின்ற இரவு எட்டாம் நாளிரவு என்று கணிக்கப்படும். ஹாஜிகளுக்கு இந்த ஐந்து நாட்களுக்கு மட்டும் ஷரீஅத்தில் இவ்வாறு ஏற்படுத்தப் பட்டுள்ளது.

## இரண்டாம் நாள் (பிறை 9) நிகழ்ச்சிகள்

துல்ஹஜ் ஒன்பதாம் நாள் ஃபஜ்ரு தொழுதபின் மினாவிலிருந்து அரஃபாவை நோக்கிச் செல்ல வேண்டும். வழியில் தல்பிய்யா, இஸ்திஃபார், ஸலவாத்து, திக்ரு போன்றவற்றைக் கூறிக் கொண்டே செல்லவேண்டும். சூரியன் உதயமாகும் முன் மினாவை விட்டுப் புறப்படுவது ஸுன்னத்திற்கு மாற்றமாகும். அரஃபாவில் 'வாதீ உர்னா' என்னும் இடத்தைத் தவிர மீதியுள்ள எந்த இடத்திலும் தங்கலாம். 'வாதீ உர்னா' என்னுமிடம் அரஃபாவின் எல்லையை விட்டும் அப்பாற்பட்டதென நான்கு இமாம்களும் கூறியுள்ளனர். அரஃபாவிலுள்ள ஜபலெ ரஹ்மத் என்னும் மலைக்கருகில் தங்குவது சிறப்பாகும்.

ஒன்பதாம் நாள் ஜவாலுக்குப்பின் அரஃபாவில் தங்குதல் ஆரம்பமாகிறது. எனவே, ஜவாலுக்குப்பின் அரஃபாவில் இருப்பது அவசியமாகும். முடிந்தால் ஜவாலுக்கு முன் குளித்துவிட வேண்டும். அதனால் உடலுக்குச் சுகம் ஏற்படும். ஆனால், சோப்புப் போடுவதோ, அழுக்குகளைத் தேய்ப்பதோ கூடாது. இஹ்ராமுடைய நிலையில் அவை தடை செய்யப்பட்டுள்ளன. குளிப்பதற்கு சாத்தியமில்லையானால் உளு செய்து கொள்ள வேண்டும்.

அரஃபாவில் லுஹரையும் அஸரையும் சேர்த்து லுஹருடைய நேரத்திலேயே தொழவேண்டும். ஒரு பாங்கு இரண்டு இகாமத்துகளைக் கொண்டு அதனைத் தொழ வேண்டும்.

இதில் முகீம், முஸாபிர் இருவருக்குமே ஒரே சட்டந்தான். இவ்வாறு சேர்த்துத் தொழுவதற்கு 'ஜம்உ தக்தீம்'' என்று சொல்லப்படும். ஆனால், இவ்வாறு சேர்த்துத் தொழுவதற்குக் கீழ்க்கண்ட நிபந்தனைகள் இருக்க வேண்டும்.

1. அரஃபா மைதானத்தில் இருத்தல்.
2. துல்ஹஜ் ஒன்பதாம் நாளாக இருத்தல்.
3. அந்த நேரத்தின் இமாம், அல்லது அவருடைய பிரதிநிதி தொழ வைத்தல்.
4. இரண்டு தொழுகைகளின் போதும் இஹ்ராமுடன் இருத்தல்.
5. லுஹரை அஸரைவிட முற்படுத்துதல்.
6. ஜமாஅத்துடன் தொழுதல்.

இந்த ஆறு நிபந்தனைகளில் ஏதேனும் ஒன்று விடுபட்டாலும் சேர்த்துத் தொழுவது கூடாது. அந்தந்த நேரத்தின் தொழுகை அந்தந்த நேரத்திலேயே — வழக்கம் போல் தொழுது கொள்ள வேண்டும்.

அரஃபாவில் ஜும்ஆ தொழுதல் கூடாது.

மினா, அரஃபாவில் தங்கியிருக்கும் தினங்களில் முகீமானவர் நிறைவாகவும் முஸாபிர் கஸ்ராகவும் தொழுது கொள்ள வேண்டும்.

லுஹர் தொழுதபின் அஸர்வரை எவ்வித வீண் பேச்சுக்களைப் பேசாமலும் தூங்காமலும் இருந்து தஸ்பீஹ், திக்ருகளில் ஈடுபட்டிருக்க வேண்டும்.

பின்வரும் சுன்னத்தான திக்ருகள், பாவமன்னிப்புத் தேடுதல் ஒவ்வொன்றையும் நூறு நூறு தடவை ஓதிக் கொள்ள வேண்டும்.

سُبْحَانَ اللّٰهِ وَالْحَمْدُ لِلّٰهِ وَلَا اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاللّٰهُ اَكْبَرُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ الْعَلِيِّ الْعَظِيْمِ

1. சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்.

என்ற கலிமாவையும் பின்னால் கூறப்படும் ஸுன்னத்தான திக்ருகள் ஒவ்வொன்றையும் நூறு நூறு தடவை ஓதிக் கொள்ள வேண்டும்.

2. நான்காம் கலிமா.

لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا شَرِيْكَ لَهٗ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

3. குல்ஹுவல்லாஹு ஸூரா.

قُلْ هُوَ اللّٰهُ اَحَدٌ ۚ اَللّٰهُ الصَّمَدُ ۚ لَمْ يَلِدْ ۙ وَلَمْ يُوْلَدْ ۙ وَلَمْ يَكُنْ لَّهٗ كُفُوًا اَحَدٌ ۝

4. சலவாத்து.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰٓى اٰلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلٰٓى اِبْرَاهِيْمَ وَعَلٰٓى اٰلِ اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ وَّعَلَيْنَا مَعَهُمْ

5. பாவமன்னிப்புத் தேடுதல்.

اَسْتَغْفِرُ اللّٰهَ الَّذِىْ لَآ اِلٰهَ اِلَّا هُوَ الْحَىُّ الْقَيُّوْمُ وَاَتُوْبُ اِلَيْهِ

நான் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுகிறேன். அவன் எத்தகையோனென்றால், அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு எந்த நாயனுமில்லை. அவன் நித்திய ஜீவன்; என்றும் நிலைத்திருப்பவன். நான் பாவங்களை விட்டும் அவன் பக்கமே மீளுகிறேன்.

எவரேனும் ஒரு முஸ்லிம் அரஃபாவின் தினத்தில் ஜவாலுக்குப் பின் கிப்லாவை முன்னோக்கியவராக இருந்து மேற்படி திக்ருகளை நூறு நூறு தடவை ஓதினால், அல்லாஹு தஆலா மலக்குகளிடம், ''என்னுடைய மலக்குகளே, தஸ்பீஹ், தஹ்லீல் கூறி என்னைப் பெருமைப்படுத்திப் புகழ்ந்து, என்னுடைய தூதரின் மீது ஸலவாத்துக் கூறிய என்னுடைய அடியானுக்கு என்ன பிரதிபலன் வழங்குவது? என்னுடைய மலக்குகளே! நான் அவனுடைய பாவத்தை மன்னித்து விட்டேன் என்பதற்கும், அவனுடைய சிபாரிசை ஏற்றுக் கொள்வேன் என்பதற்கும், அவன் இந்த அரஃபாவிலுள்ளவர்கள் அனைவருக்கும் சிபாரிசு செய்தாலும் நான் அதனை ஏற்றுக் கொள்வேன் என்பதற்கும் நீங்கள் சாட்சிகளாக இருங்கள் என்று கூறுகிறான்'' என ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளியதாக ஹஜ்ரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

(துர்ருல் மன்ஃதூர்)

பின்வரும் துஆவையும் ஓதவேண்டும். ஸஹாபீ ஒருவர், ''யா ரஸூலல்லாஹ், நீண்ட திக்ருகளை, துஆக்களை நான் நினைவில் வைக்க முடிவதில்லை'' என்று கூறியபோது, ''எல்லா துஆக்களின் கருத்துக்களையும் ஒன்று சேர்த்துக் கொள்ளும்படியான ஒரு துஆவை உமக்கு நான் கற்றுத் தருகிறேன்'' என்று கூறி, பின்வரும் துஆவை கற்றுத் தந்தார்கள்.

اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ مِنْ خَيْرِ مَا سَئَلَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَنَعُوْذُبِكَ مِنْ شَرِّ مَا اسْتَعَاذَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَاَنْتَ الْمُسْتَعَانُ وَعَلَيْكَ الْبَلَاغُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ الْعَلِيِّ الْعَظِيْمِ

யா அல்லாஹ்! உன்னுடைய நபி முஹம்மது ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன்னிடம் எந்த நன்மைகளை கேட்டார்களோ அதனை உன்னிடம் நாங்கள் வேண்டுகிறோம்; உன்னுடைய நபி முஹம்மது ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எந்தத் தீமைகளை விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடினார்களோ அதனை விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம். நீயே உதவி தேடப்படுகிறவன். (நாங்கள்) நோக்கத்தை அடைதல் உன் மீதே இருக்கிறது. தீமைகளை விட்டுத் திரும்புதலும் நன்மை கள் செய்யச் சக்தியும் அல்லாஹ்வின் உதவியைக் கொண்டே தவிர இல்லை.

எவரேனும் ஒருவர் இந்த இஸ்திஃபாரை அரஃபா நாளில் ஓதினால் அவர் கடல் நுரையளவு, அல்லது உலகத்திலுள்ள மரங்களின் இலைகள் அளவு, அல்லது உலகம் தோன்றிய நாள் முதல் இறுதிநாள் வரையுள்ள நாள்களின் எண்ணிக்கைய ளவு, அல்லது உலகிலுள்ள மணல்களின் எண்ணிக்கையளவு பாவங்கள் செய்திருந்தாலும் இன்ஷா அல்லாஹ் அவை அனைத்தையும் அல்லாஹ் மன்னித்து விடுவான் என்று கூறப்பட்டுள்ளது.

ஆகையால், அரபா மைதானத்தில் மிகத் தாழ்மையுடனும் பணிவுடனும் ஏழ்மையான கோலத்திலிருந்து, பயந்து நடுங்கி யவராக மாலை வரை தல்பா, இஸ்திஃபார், துஆ ஆகியவற் றைச் செய்து கொண்டே இருக்க வேண்டும். அஸருக்குப்பின் மஃரிப்வரை துஆச் செய்வதில் ஈடுபட்டிருக்க வேண்டும். திறந்த வெளியில் நின்று கொண்டு கைகளை உயர்த்தி துஆச் செய்ய வேண்டும். துஆவிற்கு இடையிடையே தல்பிய்யாவை யும் சொல்லிக் கொள்ள வேண்டும். தன் பெற்றோர், மனைவி, மக்கள், உறவினர்கள், நண்பர்கள் மற்றும் முஸ்லிம்கள் அனைவருக்கும் துஆ செய்ய வேண்டும். தீன், துன்யா இரண்டுடைய நன்மைகளையும் கேட்க வேண்டும். ஏனெ னில், அன்றைய தினம் அல்லாஹு தஆலா தன் அருள் மாரியைப் பொழிவதற்காக அதற்குரியவர்களைத் தேடிக்

கொண்டிருக்கிறான். எனவே, அரஃபா மைதானத்தில் துஆ கேட்டால் அது ஏற்றுக் கொள்ளப்படுகிறது. அந்த நாள் திரும்ப நமக்குக் கிடைக்குமா; கிடைக்காதா? என்று சொல்ல முடியாது. கிடைத்திருக்கும் அந்த நேரத்தை அங்குமிங்கும் சுற்றித் திரிவதிலும் வேடிக்கை பார்ப்பதிலும் வீணாக்கி விட்டால் அது பெரும் கைசேதமாகும். "போன நேரம் திரும்பி வராது" என்பது பிரபலமான பழமொழியாகும். இந்தப் புனிதமான ஹஜ்ஜை நிறைவேற்ற வேண்டுமென்று ஆசை கொண்ட எத்தனையோ இலட்சக்கணக்கானவர்கள் — கோடிக்கணக்கானவர்கள் அதனை நிறைவேற்ற முடியாம லேயே உலகத்தை விட்டுச் சென்று விட்டனர். ஹாஜிகளின் ஹஜ்ஜு புனிதமடைந்து அல்லாஹ் ஹாஜிகள் அனைவரின் ஹஜ்ஜையும் ஏற்றுக் கொள்வானாக!

அரஃபா நாளன்று மஃரிப் தொழுகையை அரஃபாவில் தொழக்கூடாது. முஜ்தலிஃபாவை அடைந்து அங்கு மஃரிபை யும் இஷாவையும் ஒரே பாங்கு ஒரே இகாமத்தைக் கொண்டு இமாமுடன் தொழவேண்டும். இமாமுடன் சேராமல் தனித் துத் தொழுதாலும் அப்பொழுதும் இருதொழுகைகளையும் சேர்த்தே தொழ வேண்டும். அவ்வாறு ஜம்உ செய்து தொழுவது வாஜிபாகும். அதன் பிறகுதான் இரண்டு தொழு கைகளுக்குரிய ஸுன்னத்துகளையும் மற்றும் நஃபில்களையும் தொழ வேண்டும். முஜ்தலிஃபா வரும் வழியில் எங்கேனும் மஃரிபை தொழுது விட்டாலும் முஜ்தலிஃபாவை அடைந்த பின் மீண்டும் மஃரிபை தொழவேண்டும்.

ஷாபியீ மத்ஹபில்... முஜ்தலிபாவில் மஃரிப், இஷா இரு தொழுகைகளையும் ஜம்உ செய்வது சுன்னத்தாகும். எனவே, (அவர்களிடம்) மஃரிபையும் இஷாவையும் அதன தன் நேரங்களில் தொழுவதும், அல்லது இரண்டையும் மஃரிபுடைய நேரத்திலேயே (ஜமாத்துடனோ, தனித்தோ) ஜம்உ செய்து தொழுவதும் அல்லது இரண்டில் ஒன்றை ஜமாஅத்துடனும் மற்றொன்றைத் தனித்துத் தொழுவதும் கூடும். ஆனால், சிறப்புத் தன்மை இல்லாமலாகிவிடும்; சுன்னத்து விடுபட்டு விடும்.

முஜ்தலிஃபா செல்லும் வழியில் தல்பிய்யா, தக்பீர், ஸலவாத்து ஆகியவற்றை அதிகமாக ஓதிக்கொண்டே செல்ல வேண்டும். முஜ்தலிஃபாவில் இரவு முழுவதும் விழித்திருந்து வணங்குதல் முஸ்தஹப்பாகும். ஏனெனில், சில உலமாக்க ளின் கருத்துப்படி அந்த இரவு ஜு முஆவுடைய இரவைவிட வும் லைலத்துல் கத்ரு இரவை விடவும் சிறந்ததாகும். அரஃபா வில் ஓதுகின்ற துஆக்களை திக்ருகளை முஜ்தலிஃபாவிலும் ஓதிக் கொண்டிருக்க வேண்டும்.

முஜ்தலிஃபாவில் பத்தாம் நாள் ஸுப்ஹு ஸாதிக் ஆனதிலிருந்து சூரியன் உதயமாகும் வரை தங்குவது வாஜிபா கும். ஆனால், சில பஸ்காரர்கள் சீக்கிரம் செல்ல வேண்டு மென்பதற்காக ஸுப்ஹு ஸாதிக் ஆவதற்கு முன்னதாகவே மக்களை ஏமாற்றி அழைத்துச் செல்ல முற்படுவார்கள். இன்னும் சிலர் மனிதர்களை ஏமாற்றுவதற்காக ஸுப்ஹ் ஸாதிக் ஆவதற்கு முன்பே பாங்கும் சொல்லுவார்கள். இவ்வித மான மனிதர்களின் ஏமாற்றத்தில் சிக்கிவிடக் கூடாது. இவ்வி தம் ஏமாறாதிருப்பதற்காகவே சரியான நேரத்தை அறிவிப்பதற் காக அங்கு குண்டு வெடிக்கப்படுகிறது. அதனைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.

எவ்விதத் தங்கடமுமின்றி ஸுப்ஹ் ஸாதிக் ஆவதற்கு முன்னமே எவரேனும் ஒருவர் முஜ்தலிஃபாவை விட்டுப் புறப்பட்டுவிட்டால், ஒரு தமு கொடுப்பது அவர் மீது வாஜிபாகும்.

ஸுப்ஹ் ஸாதிக் ஆனபின் ஜமாஅத்துடனோ, அல்லது தனியாகவோ ஃபஜ்ருடைய தொழுகையைத் தொழ வேண் டும். பிறகு சூரியன் உதயமாவதற்கு சற்று முன் இரண்டு ரக்அத் தொழுகின்ற அளவுக்கு நேரமிருக்கும்போது மினாவை நோக்கிப் புறப்பட வேண்டும்.

மினாவில் கல்லெறிவதற்காக முஜ்தலிஃபாவிலேயே 70 சிறு கற்களைப் பொறுக்கி வைத்துக் கொள்வது சிறப்பாகும்.

பொருளடக்கம்

## மூன்றாம் நாள் (பிறை 10) நிகழ்ச்சிகள்

வழியில் மிக்க அமைதியுடன் தல்பிய்யா, திக்ரு ஆகிய வற்றைக் கூறியவாறே முஜ்தலிஃபாவிலிருந்து மினாவை நோக்கி வரவேண்டும். வழியில் 'வாதீ முஹஸ்ஸர்' என்று ஓர் இடமிருக்கிறது. (அது யானைப் படையினரின் மீது வேதனை இறங்கிய இடமாகும்) கால்நடையாக வரும்பொழுது அவ்விடத்தை வேகமாக ஓடிக் கடந்துவிட வேண்டும். அரசாங்கத்தினர் இப்பொழுது அவ்விடத்தில் அடையாளமிட்டு — பெயரெழுதி — வைத்திருக்கின்றனர். அவ்விடத்தைக் கடக்கும் பொழுது பின்வரும் துஆவை ஓதவேண்டும்.

اَللّٰهُمَّ لَا تَقْتُلْنَا بِغَضَبِكَ وَلَا تُهْلِكْنَا بِعَذَابِكَ

وَعَافِنَا قَبْلَ ذٰلِكَ

யா அல்லாஹ்! உன்னுடைய கோபத்தைக் கொண்டு எங்களை அழித்துவிடாதே; உன்னுடைய தண்டனையைக் கொண்டு எங்களை நாசமாக்கி விடாதே, அதற்கு முன்னதாக எங்களை நீ மன்னித்தருள்வாயாக!

## கல்லெறிதலும் துஆவும்

பத்தாம் நாள் காலை மினாவை அடைந்து முதன் முதலாக 'ஜம்ரத்துல் அகபா' என்னுமிடத்திற்கு மட்டும் ஏழு கற்களை எறிய வேண்டும். கலிமா விரலாலும் பெருவிரலாலும் கல்லைப்பிடித்து எறிவது முஸ்தஹப்பாகும். அன்று சூரியன் உதயமானதிலிருந்து ஜவாலுக்குள் எறிவது ஸுன்னத்தாகும் அதற்குப் பிறகு எறிவது ஸுன்னத்திற்கு மாற்றமாகும். ஆனால், இக்காலத்தில் கல்லெறியுமிடத்தில் பயங்கரமான ஜனநெரிசல் இருப்பதால், சுன்னத்திற்கு மாற்றமாக (மக்ரூஹாக) இருந்தாலும், உயிரையும் உடலையும் பாதுகாப்பதற்காக அன்று மாலைக்குள் எறிந்து கொள்வது நல்லது. ஒவ்வொரு கல்லையும் எறியும்போது பின்வரும் துஆவை ஓத வேண்டும்.

بِسْمِ اللّٰهِ اَللّٰهُ اَكْبَرُ رَغْمًا لِّلشَّيْطَانِ وَرِضًى لِّلرَّحْمٰنِ
اَللّٰهُمَّ اجْعَلْهُ حَجًّا مَّبْرُوْرًا وَّذَنْبًا مَّغْفُوْرًا وَّسَعْيًا مَّشْكُوْرًا

அல்லாஹ்வின் திருநாமம் கொண்டு (எறிகிறேன்.) அல்லாஹ் மிகப் பெரியவன், ஷைத்தானை மண்ணைக் கவ்வச் செய்வதற்காக, ரஹ்மானை திருப்திப்படுத்துவதற்காக... (இதனை எறிகிறேன்) யா அல்லாஹ், இதனை ஏற்றுக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜாகவும், மன்னிக்கப்பட்ட பாவமாக வும், நன்றி செலுத்தப்பட்ட முயற்சியாகவும் ஆக்கியருள்வா யாக!

எவருக்கேனும் இந்த துஆ பாடமில்லையானால், ஸுப் ஹானல்லாஹ், அல்லது லாஇலாஹ இல்லல்லாஹ் என்ப தைக் கூறி எறிய வேண்டும். எந்த திக்ருமில்லாமல் எறிவது தீயதாகும்.

முதல் கல் எறிந்தவுடனேயே தல்பிய்யாவை நிறுத்தி விட வேண்டும். கல் எறிந்தபின் குர்பானீ கொடுக்க வேண்டும். குர்பானீ கொடுப்பது முதமத்திஃ, காரின் இருசாராரின் மீதும் வாஜிபாகும். முஃப்ரிதின் மீது முஸ்தஹப்பாகும்.

## குர்பானீயின் சில விளக்கங்கள்

1. ஹஜ்ஜுக்குரிய நன்றியாக இந்தக் குர்பானீ அமைந்துள் ளது.

2. காரின், முதமத்திஃ இருவரின் மீதும் இக் குர்பானீ வாஜிபாகும்.

3. ஈதுல் அள்ஹாவுடைய குர்பானீக்கு எத்தகைய பிராணி அறுக்கப்பட வேண்டுமெனச் சொல்லப்பட்டுள்ளதோ அத்த கைய பிராணியே இதற்கும் அறுக்கப்பட வேண்டும்.

4. ஆடாக இருந்தால் ஒரு நபருக்குக் கொடுக்க வேண் டும். மாடு, எருமை, ஒட்டகம் போன்றவை ஏழு நபர்களுக் காக குர்பானீ கொடுக்கலாம். ஏழு நபர்களை விடக் குறைவா

பொருளடக்கம்

னவர்களும் கொடுக்கலாம். அனைவரும் குர்பானீ செய்கின்ற நிய்யத்துடையவர்களாக இருக்க வேண்டும்.

5. ஹஜ்ஜுடைய குர்பானீ செய்கின்ற ஒருவர் மக்காவில் முகீமாக இல்லாமல், முஸாபிராக (பிரயாணியாக) இருப்பாரானால் அவர் மீது ஈதுல் அள்ஹாவுடைய குர்பானீயை நிறைவேற்றுவது வாஜிபாகாது. அவர் முகீமானவராகவும் ஜகாத் விதியாகின்ற தொகை உடையவராகவும் இருந்தால் ஹஜ்ஜுடைய குர்பானீயுடன் ஈதுல் அள்ஹாவுடைய குர்பானீயையும் நிறைவேற்றுதல் வாஜிபாகும்.

6. குர்பானீயை தன்னுடைய கையினாலேயே அறுப்பது தான் சிறந்ததாகும். அறுக்கத் தெரியவில்லையானால் அறுக்குமிடத்தில் அவர் நின்றிருப்பது முஸ்தஹப்பாகும்.

7. அறுப்பதற்கு முன் அல்லது அறுத்தபின் பின்வரும் துஆவை ஓதிக் கொள்ளவேண்டும்.

إِنِّىْ وَجَّهْتُ وَجْهِىَ لِلَّذِىْ فَطَرَ السَّمٰوٰتِ
وَالْأَرْضَ حَنِيْفًا وَّمَا أَنَا مِنَ الْمُشْرِكِيْنَ إِنَّ
صَلٰوتِىْ وَنُسُكِىْ وَمَحْيَاىَ وَمَمَاتِىْ لِلّٰهِ رَبِّ
الْعَالَمِيْنَ لَا شَرِيْكَ لَهٗ وَبِذٰلِكَ أُمِرْتُ وَأَنَا
أَوَّلُ الْمُسْلِمِيْنَ اَللّٰهُمَّ تَقَبَّلْ مِنِّىْ هٰذَا
النُّسُكَ وَاجْعَلْهُ قُرْبَانًا لِّوَجْهِكَ وَعَظِّمْ
أَجْرِىْ عَلَيْهَا ؕ

நிச்சயமாக நான் வானங்களையும் பூமியையும் படைத்தவனின்பால் முற்றிலும் சாய்ந்தவனாக என்னுடைய முகத்தை நான் முன்னோக்கி வைத்துவிட்டேன். நான் இணை வைக்கிற

வர்களில் உள்ளவனல்லன். நிச்சயமாக என்னுடைய தொழு கையும் என் வணக்கமும் என் வாழ்வும் என் மரணமும் சர்வ உலகத்தார்களின் இரட்சகனான அல்லாஹ்வுக்கே உரி யவை. அவனுக்கு யாதோர் இணையுமில்லை. இவ்வாறே நான் ஏவப்பட்டுள்ளேன். நான் வழிபடுபவர்களில் முதன்மை யானவன். யா அல்லாஹ், என்னிடமிருந்து இந்தக் குர்பா னீயை ஏற்றுக் கொள்வாயாக! இதனை உன் திருப்பொருத்தத் திற்காகச் செய்த குர்பானீயாக ஆக்கிடுவாயாக! இதன்மீது எனக்குரிய கூலியை மகத்தானதாக்கி வைப்பாயாக!

குர்பானீ கொடுத்தபின் தலைமுடியைக் களைந்து இஹ் ராமை அவிழ்த்து விடலாம். தலைமுடியைச் சிரைப்பதுதான் மிகச் சிறந்ததாகும். பெண்கள் தலைமுடியை ஓர் அங்குல அளவுக்குக் கத்தரித்துக் கொள்ள வேண்டும்.

## முடி களைவதின் விளக்கம்

குர்பானீ கொடுத்தபின் தலைமுடியைச் சிரைக்க வேண் டும்; அல்லது கத்தரித்துக் கொள்ள வேண்டும். கிப்லாவை முன்னோக்கி உட்கார்ந்து முடியைக் களைவது முஸ்தஹப்பா கும். தலையில் நாலில் ஒருபாகம் முடியைச் சிரைப்பது அல்லது கத்தரிப்பது வாஜிபாகும்.

பத்தாம் நாளன்று கல்லெறிந்து, குர்பானீ கொடுத்தபின் தலைமுடி களையாமல் இஹ்ராமை விட்டு நீங்க முடியாது. தலைமுடியைக் கத்தரிப்பதைவிட அதனைச் சிரைப்பதுதான் மிகச் சிறந்ததாகும். நாலிலொரு பங்கு எடுப்பதைவிட தலைமுடி முழுவதையும் சிரைப்பது, அல்லது முழுவதிலும் நாலில் ஒரு பாகம் கத்தரிப்பது முஸ்தஹப்பாகும்.

முடியைக் கத்தரிப்பதானால் ஒரு விரல் நீளத்தை விடச் சற்று அதிகமாகக் கத்தரித்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், சிறியதாக உள்ள முடி கத்தரிக்கப்படாமல் இருந்துவிடக் கூடும்.

தாடி முடியை ஒழுங்குபடுத்துவது, மீசையை வெட்டுவது, நகம் வெட்டுவது போன்ற செயல்களைத் தலைமுடி களைந்த பிறகுதான் செய்ய வேண்டும். தலைமுடி களைவதற்கு முன் செய்தால் குற்றப்பரிகாரம் கொடுக்க வேண்டியதாகும். (குற்றப் பரிகாரத்தின் பாடத்தில் அது பற்றி விளக்கப்பட்டுள்ளது.)

பெண்கள் தலைமுடியைச் சிரைப்பது ஹறாமாகும். நாலிலொரு பாகத்தை ஒரு விரல் நீளத்திற்குக் கத்தரித்தால் போதுமானது. சிறிது அதிகமாகக் கத்தரிப்பது நல்லது.

தலைமுடியை முழுவதும் சிரைப்பதுதான் சுன்னத்தான முறையாகும். நாலில் ஒரு பாகம் சிரைப்பது; அல்லது கத்தரிப்பது கூடுமென்றாலும், அது மக்ரூஹ் ஆகும்.

தலைமுடி எடுக்கும் முன்னும் எடுத்த பின்னும் தக்பீர் சொல்லிக் கொள்ள வேண்டும். எடுத்தபின் இந்த துஆவை ஓதவேண்டும்.

பொருளடக்கம் 

எங்களை நேர்வழியில் நடத்தாட்டி, எங்களின் மீது அருட்கொடைகளை வழங்கிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் உரியன. யா அல்லாஹ், இந்த என்னுடைய முன் நெற்றி முடி உன் கையிலிருக்கிறது. எனவே, என்னிலிருந்து இதனை ஏற்றுக் கொள்வாயாக! என் பாவங்களை எனக்கு மன்னிப்பாயாக! யா அல்லாஹ், ஒவ்வொரு முடிக்கும் பகரமாக எனக்கு ஒரு நன்மையை எழுதி, என்னை விட்டும் ஒரு தீமையை அழித்து, ஒரு பதவி உயர்வையும் வழங்கிடுவா யாக! யா அல்லாஹ், எனக்கும், முடியைச் சிரைத்துக் கொண்டவர்களுக்கும், முடியை வெட்டிக் கொண்டவர்களுக் கும் நீ மன்னிப்பருள்வாயாக! விசாலமான மன்னிப்பாளனே! எங்களுடைய கிரியைகளை எங்களுக்கு நிறைவேற்றி வைத்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! யா அல்லாஹ், எங்களுக்கு ஈமானையும் உறுதியையும் அதிகப்படுத்துவாயாக!

சிரைத்த முடிகளையும் நகங்களையும் புதைத்து விடுவது முஸ்தஹப்பு; அசுத்தமில்லாத இடத்தில் போடுவதும் கூடும். அசுத்தமான இடத்தில் போடுவது மக்ரூஹ்.

தலையைச் சிரைப்பதனால் ஏதேனும் இடையூறு ஏற்படு மானால், அல்லது சிரைப்பவர் யாருமே இல்லையானால், அல்லது தலையில் காயம் போன்றவை இருக்குமானால் அப்பொழுது முடியைக் கத்தரிப்பது வாஜிபாகும். முடி கத்தரிக்க முடியாத அளவுக்குச் சிறியதாக இருக்குமானால் முடியைச் சிரைப்பது வாஜிபாகும்.

தலைமுடியை சுண்ணாம்பு போன்ற பொருளை உபயோ கித்து நீக்கினாலும் அல்லது முடியைப் பிடுங்குவது கொண்டு நீக்கினாலும் அல்லது வேறு எவ்வகையில் நீக்கினாலும் நிறைவேறிவிடும். அது தன்னுடைய செயலைக் கொண்டிருந் தாலும் சரி, அல்லது பிறருடைய செயலைக் கொண்டிருந்தா லும் சரி.

தலையில் முடியே இல்லையானால் அல்லது சிரைக்க முடியாத அளவுக்குக் காயங்கள் இருக்குமானால் தலையில்

கத்தியை வைத்து சிரைப்பது போல் இழுத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு கத்தியையும் இழுத்துக் கொள்ள முடியாத அளவுக்கு காயங்கள், புண்கள் இருந்தால் முடி களைவது என்ற வாஜிப் அவரை விட்டும் நீங்கிவிடும். எனினும் அவர் பன்னிரண்டாம் நாள் முடியும்வரை காத்தி ருந்து அதன் பிறகு ஹலாலாவது சிறப்பாகும்.

முடி எடுக்க வேண்டியவருக்கு கத்தியோ வேறு ஆயு தமோ கிடைக்கவில்லை என்பதால் அந்த வாஜிப் அவரை விட்டும் நீங்கிவிடாது. அவ்வாறான சமயத்தில் முடி களையும் வரை அவர் ஹலாலாக முடியாது.

ஒருவர் முடி களையும் தருணத்தில் தனக்குத்தானே முடி எடுத்துக் கொள்வதும் பிறருக்கு முடி எடுத்துவிடுவதும் — அவர் இஹ்ராம் அணிந்தவராக இருந்தாலும் சரி — கூடும்.

முடி களையும் நேரம் பத்தாம் நாள் சுபுஹு ஸாதிக்கிலி ருந்து ஆரம்பமாகிறது. பன்னிரண்டாம் நாள் சூரியன் மறைவ தற்குள் அது நிறைவேற்றப்பட வேண்டும். மேலும் அது ஹரமுடைய எல்லைக்குள் நிறைவேற்றப்பட வேண்டும். பகலில் இரவில் எந்த நேரத்தில் வேண்டுமானாலும் எடுக்க லாம்.

பன்னிரண்டாம் நாள் கடந்த பிறகு எடுத்தாலும், அல்லது ஹரம் எல்லைக்கு வெளியே எடுத்தாலும் 'தமு' கொடுப்பது வாஜிபாகும். முடி எடுத்தல் நிறைவேறிவிடும்.

முடி களைந்த பிறகு தையல் உடைகளை அணிவது, வாசனை பூசுவது, வேட்டையாடுவது போன்ற அனைத்தும் அவருக்கு ஹலாலாகிவிடும். ஆனால் மனைவியிடத்தில் உடலுறவு கொள்வது, அணைப்பது, முத்தங் கொடுப்பது ஆகியவை கூடாது, ஹராமாகும். தவாஃப் ஜியாரத்திற்குப் பிறகுதான் இவை அனைத்தும் கூடும்.

பத்தாம் நாளன்று முதலில் கல்லெறிதல், பிறகு குர்பானீ கொடுத்தல், அதன் பிறகு முடி களைதல் ஆகிய மூன்றையும் வரிசைக்கிரமமாகச் செய்வது ஹனபீ மத்ஹபின் படி வாஜிபா

கும். (மற்ற மூன்று மத்ஹபுகளிலும் சுன்னத்தாகும்) இந்த வரிசைக் கிரமம் மாறுபட்டால் 'தமு' கொடுப்பது வாஜிபாகும்.

## தவாஃபெ ஜியாரத்

கல்லெறிதல், குர்பானீ, தலைமுடி களைதல் ஆகிய மூன்றையும் நிறைவேற்றிய பின்னால் மக்காவிற்குச் சென்று பைத்துல்லாஹ்வை தவாஃப் செய்து வரவேண்டும். இந்த தவாஃப் ஃபர்ளாகும். இதற்கு தவாஃபெ ஜியாரத் என்று கூறப்படும். இதனை பத்தாம் நாளன்று செய்வது சிறப்பாகும். பிறகு பன்னிரண்டாம் நாள் சூரியன் மறைவதற்குள் செய்வது கூடும். அதற்குப்பின் மக்ரூஹ் தஹ்ரீமாகும். எனவே, எவரேனும் ஒருவர் பன்னிரண்டாம் நாள் சூரியன் மறைந்தபின் தவாஃபெ ஜியாரத் செய்தால் அவர் 'தமு' கொடுப்பது வாஜிபாகும்.

ஏதேனும் இடையூறினால் தவாப் ஜியாரத் செய்ய முடியாது போனால் அவரே அதனைச் செய்து முடிக்கும் வரை ஹஜ் நிறைவேறாது. எனவே, அவர் இறப்பதற்குள் அந்தத் தவாபை எப்படியும் நிறைவேற்றியாக வேண்டும்.

துல் ஹஜ் எட்டாம் நாள் இஹ்ராம் கட்டியபின் தவாஃப் செய்து ஸயீ செய்திருந்தால் இப்பொழுது தவாஃபெ ஜியாரத்திற்குப்பின் ஸயீ செய்ய வேண்டிய அவசியமில்லை. முன்னால் ஸயீ செய்யவில்லையானால் இப்பொழுது தவாஃப் ஜியாரத்திற்குப் பின் ஸயீ செய்ய வேண்டும். தவாஃபின் முந்திய மூன்று சுற்றில் ரமல் செய்யவும் வேண்டும்.

தவாஃபெ ஜியாரத்திற்குப் பின் மனைவியுடன் எல்லாவிதமான உறவாடுதலும் கூடும். தவாஃபெ ஜியாரத்தை முடித்த பின் மினாவிற்குத் திரும்பி வந்துவிட வேண்டும். மினாவைத் தவிர வேறு இடத்தில் இரவைக் கழிப்பது மக்ரூஹ் ஆகும். மினாவிலுள்ள 'மஸ்ஜிதுல் கைபில்' தொழுகையை நிறைவேற்றுவது நல்லது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கு தொழுதிருக்கிறார்கள்.

## நான்காம் நாள், ஐந்தாம் நாள் நிகழ்ச்சிகள்

ஹஜ்ஜுடைய நான்காம் நாள், ஐந்தாம் நாள் ஆகிய துல் ஹஜ் பிறை 11, 12 இரு தினங்களும் ஜவாலுக்குப் பின் மூன்று ஜம்ராத்து (கல்லெறியுமிடங்)களிலும் கல்லெறிய வேண்டும். முதல் ஜம்ரா மஸ்ஜிது கைபின் பக்கமாக இருக்கிறது. அதற்கு அடுத்து நடு ஜம்ராவும் அதற்கு அடுத்து கடைசி ஜம்ராவும் இருக்கின்றன.

பிறை பன்னிரண்டுக்குப்பின் நீங்கள் மக்காவிற்குச் செல்லலாம். இவ்வாறு கல்லெறிந்தபின் அல்லாஹ்வின் கருணையால் ஹஜ் நிறைவேறி விடுகிறது. அவ்வாறு பன்னிரண்டாம் நாள் மினாவிலிருந்து புறப்படாமல், பதிமூன்றாம் நாள் ளுஹ்ருவரை மினாவில் தங்கிவிட்டால் அன்றும் மூன்று இடங்களுக்கும் கல்லெறிந்த பிறகுதான் மக்காவுக்குத் திரும்ப வேண்டும்.

## கல்லெறிதலில் சில முக்கியச் சட்டங்கள்

கல்லெறிகின்ற விஷயத்தில் பெரும்பாலான ஹாஜிகள் பல தவறுகளைச் செய்து விடுகின்றனர். அதனால் தமு கொடுப்பதும் வாஜிபாகி விடுகிறது. ஆனால், பலர் குற்றம் செய்த பின் பணமில்லாத காரணத்தால் அல்லது அறியாமையின் காரணத்தால் 'தமு' கொடுக்காமலேயே இருந்து விடுகின்றனர். அது பெருங் குற்றமாகவும் ஹஜ்ஜில் குறையாகவும் இருந்து கொண்டே இருக்கும். ஆகையால், அது சம்பந்தமாக சில முக்கியமான சட்டங்களை மட்டும் இங்கு கூறுகிறோம். விரிவான முறையில் தெரிய வேண்டுமானால் பெரிய கிதாபுகளைப் பார்க்கவும்; அல்லது ஆலிம்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்.

1. கிரான், அல்லது தமத்துஃ இஹ்ராம் கட்டியுள்ள ஹாஜிகள் பத்தாம் நாளில் முதலில் கல்லெறிதல், இரண்டாவது குர்பானீ கொடுத்தல், மூன்றாவது தலைமுடி களைதல்

என்ற முறையில் மூன்றையும் வரிசையாகச் செய்தல் வாஜிபா கும்.

ஹஜ்ஜுக்கு மட்டும் இஹ்றாம் கட்டிய முஃப்ரித் குர்பானீ கொடுப்பது அவருக்கு வாஜிபில்லை. எனவே, அவர் கல்லெ றிந்துவிட்டு முடியைக் களைந்து இஹ்றாமிலிருந்து நீங்கிடு வார்.

2. பத்தாம் நாள் கடைசி ஜம்ராவில் மட்டும் கல்லெறிய வேண்டும்; மற்றுமுள்ள இரண்டிற்கும் அன்று கல்லெறிதல் பித்அத்தாகும்.

3. பத்தாம் நாள் கடைசி ஜம்ராவுக்குக் கல்லெறியும் போது முதற் கல் எறிந்தவுடனேயே தல்பிய்யாவை நிறுத்தி விட வேண்டும்.

4. பத்தாம் நாள் கல்லெறிதல் சூரியன் உதயமான நேரத்திலிருந்து ஜவால் வரை ஸுன்னத்தாகும். ஏதேனும் ஒரு தங்கடத்தினால் ஜவாலுக்குள் கல்லெறிய முடியாவிட் டால் ஜவாலுக்குப் பின் எறிந்து கொள்ளலாம். (ஆனால், மக்ரூஹ் ஆகும்.) அதிகமான நிர்ப்பந்தம் ஏற்பட்டால் இரவி லும் எறியலாம். பெண்கள் இரவில் எறிவதுதான் சிறப்பாகும். ஆனால், ஸுபுஹ் ஸாதிக் ஆகும் முன் எறிந்து விட வேண்டும். ஸுபுஹ் ஸாதிக் வரை எறியாவிட்டால் தமு வாஜிப் ஆகும்.

5. பத்தாம் நாள் முடி களைந்த பின் தையல் உடையை அணிவது, வாசனை பூசுவது, வேட்டையாடுவது அனைத்தும் கூடும். ஆனால், மனைவியுடன் உடலுறவு கொள்வதும், அது சம்பந்தமான விஷயங்களைப் பேசுவதும் செய்வதும் கூடாது. இவை தவாஃபெ ஜியாரத்திற்குப் பின்னர்தான் கூடும்.

6. கல்லெறியும் தினங்கள் பிறை 10, 11, 12, 13 ஆகிய நான்கு தினங்களாகும். நான்காம் நாள் விரும்பினால் எறிய லாம். அதாவது: பதிமூன்றாம் நாள் ஸுபுஹுக்குமுன் மக்காவுக்கு வந்துவிட்டால், பதிமூன்றாம் நாள் கல்லெறிதல் வாஜிபாகாது.

7. பிறை 11, 12, 13 மூன்று ஜம்ராக்களிலும் கல்லெறிய வேண்டும். முந்திய, இரண்டாம் ஜம்ராக்களில் கல்லெறிந்த பின் சுமார் இருபது ஆயத்துகள் ஓதும் நேரம் வரை துஆ கேட்குதல் ஸுன்னத்தாகும்.

8. 11, 12 ஆகிய இருதினங்களில் ஜவாலுக்குப் பின் சூரியன் மறையும்வரை கல்லெறிதல் ஸுன்னத்தாகும். மார்க்க சம்பந்தமான தங்கடம் ஏதேனும் ஏற்பட்டால் இரவில் ஸுபுஹ் ஸாதிக் ஆவதற்கு முன் எறிந்து விடவேண்டும். இல்லையெனில் 'தமு' வாஜிபாகும்.

9. பன்னிரண்டாம் நாள் சூரியன் மறையும் முன் மக்காவுக்கு வந்து விடுவது எவ்வித மக்ரூஹும் இல்லாமல் கூடும். அன்று சூரியன் மறைந்தபின் மக்காவுக்கு வருதல் மக்ரூஹ் ஆகும். பதிமூன்றாம் நாள் ஸுபுஹ் ஸாதிக்வரை தங்கி விட்டால் கல்லெறிந்த பிறகுதான் மக்காவிற்கு வரவேண்டும். பதிமூன்றாம் நாள் ஸுபுஹு ஸாதிக் ஆன பின் கல்லெறிந்து வந்துவிட்டாலும் கூடும். ஆனால், அது மக்ரூஹ் ஆகும். ஸுன்னத்தான நேரம் ஜவாலுக்குப் பின் சூரியன் மறையும் வரையாகும். சூரியன் மறைந்தபின் கல்லெறியும் நேரம் முடிந்துவிடும்.

10. கல்லெறிதலில் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே விதச் சட்டந்தான். எவ்வித வித்தியாசமுமில்லை. எனினும் பெண்கள் இரவில் எறிதல் சிறப்பாகும்.

11. ஹாஜி ஒருவர் நின்று தொழமுடியாத அளவுக்கு நோயுள்ளவராக இருந்தால், அல்லது கல்லெறியுமிடம் வரை நடந்து செல்வது அவருக்குச் சிரமமாக இருந்தால் இவ்விதமானவர் மார்க்க ரீதியில் தங்கடம் உடையவராவார். இவர் தனக்கு பதிலாக வேறொருவரைக் கல்லெறிவதற்காக ஏற்படுத்திக் கொள்ளலாம்.

மினாவில் கல்லெறியுமிடத்திற்கு மேல் இப்பொழுது பாலம் கட்டப்பட்டுள்ளது. அதில் மூன்று இடங்களில் கிணறு போன்று வட்டமாகச் சுவரெழுப்பி நடுவில் தூண் வைக்கப்

பட்டுள்ளது. அந்தத் தூண்களை நோக்கியே ஹாஜிகள் கற்களை எறிகின்றனர். ஆனால், அசலில் கல்லெறியும் இடம் அந்தத் தூண்களுக்கு நேர் கீழே இருக்கிறது. எனவே பாலத்தின் மேலிருந்து எறியப்படும் கற்கள் கீழே உள்ள கற்கள் சேகரமாகும் அசல் இடத்திற்குப் போய்ச் சேரவேண்டும். அவ்வாறு சேரவில்லையானால் கற்கள் எறிதல்கூடாது. திரும்பவும் எறிய வேண்டும். இதனை நன்றாக கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

## பத்லீ ஹஜ் விளக்கம்

பத்லீ ஹஜ் என்பது, இறந்து விட்டவருக்காகவும் ஹஜ்ஜுக்குச் செல்ல அறவே இயலாத தங்கடமுள்ளவருக்காகவும் செய்யப்படுவதாகும்.

அல்லாஹ்வின் நல்லடியார்களில் சிலர் தங்களின் பெற்றோர்களுக்காக, இன்னும் உறவினர்களுக்காக பத்லீ ஹஜ் செய்கின்றனர். அவ்வாறு செய்யும் பொழுது தாங்களே அதனை செய்ய வேண்டும்; அல்லது மார்க்கச் சட்டங்கள் தெரிந்த தீனுடைய நல்லடியார் எவரையேனும் ஹஜ்ஜு செய்து வர அனுப்பவேண்டும் பத்லீ ஹஜ்ஜைப் பற்றி ஹதீஸில் பல சிறப்புகள் கூறப்பட்டுள்ளன. அவற்றில் சில இங்கு எழுதப்படுகின்றன;

1. ஒரு பத்லீ ஹஜ்ஜினால் மூன்று மனிதர்கள் சொர்க்கம் செல்லுகிறார்கள். (1) யாருக்கு ஹஜ்ஜு செய்யப்படுகிறதோ அவர் (— இறந்தவர்), (2) ஹஜ்ஜு செய்ய வைப்பவர் (3) ஹஜ்ஜு செய்கிறவர்.

2. ''எவரேனும் ஒருவர் இறந்து விட்டவருக்காக ஹஜ்ஜு செய்தால், இறந்தவருக்கு ஒரு ஹஜ்ஜுடைய நன்மை எழுதப் படுகிறது; ஹஜ்ஜு செய்தவருக்கோ ஏழு ஹஜ்ஜுகளுடைய நன்மைகள் கிடைக்கின்றன'' என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது.

பொருளடக்கம்

3. "எவரேனும் ஒருவர் தன் பெற்றோருக்காக தானே ஹஜ்ஜு செய்வாரானால், அவருக்குப் பத்து ஹஜ்ஜுகளுடைய நன்மைகள் கிடைக்கும்" என ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்களின் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது.

(ஜுப்தத்துல் மனாஸிக்)

ஒரு ஹதீஸில் அருளப்பட்டிருப்பதாவது:

ஹஜ்ஜத்துல் விதாஃவின்போது ஸஹாபிய்யதான பெண்மணி ஒருவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சமூகத்தில் வந்து, யா ரஸூலல்லாஹ்! என் தந்தை மீது ஹஜ் கடமையாக இருக்கிறது; ஆனால், வயோதிகத்தின் காரணமாக அவர்கள் வாகனத்தின் மீது அமர்ந்து பிரயாணம் செய்ய முடியவில்லை. இந்நிலையில் அவர் சார்பாக நான் ஹஜ்ஜு செய்யலாமா?" என்று கேட்டார், "ஆம் செய்யலாம்" என நபியவர்கள் அனுமதியளித்தார்கள். (புகாரீ-முஸ்லிம்)

மற்றொரு சமயம் ஸஹாபி ஒருவர், யா ரஸூலல்லாஹ்! என்னுடைய சகோதரி ஹஜ்ஜு செய்வதாக நேர்ச்சை செய்திருந்தார்; அதனை நிறைவேற்றும் முன்னமே இறந்து விட்டார். இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார். "அவள் மீது கடன் இருந்தால் நீ அதனை நிறைவேற்றுவாயா? இல்லையா?" என்று நபி (ஸல்) அவர்கள் வினவினார்கள். "ஆம் நிறைவேற்றுவேன்" என பதில் கூறினார். "அவ்வாறே இது அல்லாஹ்வுடைய கடனாகும்; அதனை நிறைவேற்றுவீராக!" என்று அருளினார்கள்.

முதல் ஹதீஸின் மூலம் முடியாதவர்களுக்காகவும், இரண்டாவது ஹதீஸின் மூலம் இறந்தவர்களுக்காகவும் மற்றவர் பத்லீ ஹஜ் செய்யலாம் என்பது விளக்கப்படுகிறது.

பத்லீ ஹஜ்ஜுக்காகப் பிறரை அனுப்புகிறவர், அவருக்குரிய போக்குவரத்துச் செலவினங்களைத் தன் வசதிக்கேற்றவாறு முழுமையாகக் கொடுத்திட வேண்டும்.

பத்லீ ஹஜ்ஜுக்குச் செல்கிறவர் ஹஜ்ஜுக்காக மட்டும் (ஹஜ்ஜெ இஃப்ராத்) இஹ்ராம் கட்டி, பின்வருமாறு நிய்யத்து செய்ய வேண்டும்.

 

اَللّٰهُمَّ اِنِّیْ اُرِیْدُ الْحَجَّ عَنْ فُلَانٍ وَاَحْرَمْتُ بِهٖ
لِلّٰهِ تَعَالٰى لَبَّيْكَ بِحَجَّةٍ عَنْهُ

யா அல்லாஹ், இன்னாரின் சார்பில் ஹஜ்ஜு செய்வதற்காக நான் நாடுகிறேன். அவர் சார்பில் நான் அல்லாஹ்விற்காக இஹ்ராம் கட்டி, அவர் சார்பில் ஹஜ்ஜு செய்ய தல்பிய்யாவும் கூறுகிறேன்.

'இன்னார்' என்ற இடத்தில் அவருடைய பெயரைக் கூறவேண்டும்; பெயர் தெரியாவிட்டால் அதனை (— அவரை) மனதில் உருவகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

## பத்லீ ஹஜ்ஜின் சில முக்கிய சட்டங்கள்

பத்லீ ஹஜ்ஜில் தமத்துஃ செய்வதற்குரிய சட்டம் சற்று சிக்கலானதாக — சிரமமானதாக இருக்கிறது. ஏனெனில், தமத்துஃ செய்வதில் பத்லீ ஹஜ் செய்பவர் ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டும் போது மீகாத்திலிருந்து கட்டுவதில்லை; மக்காவிலிருந்து — எட்டாம் நாள் — இஹ்ராம் கட்டுகிறார், அங்கிருந்தே மினா, அரஃபாவுக்குச் செல்கிறார். ஆகவே, பேணுதல் மிக்க உலமாக்கள் பத்லீ ஹஜ் செய்வதில் தமத்துஃ செய்வதைத் தடை செய்துள்ளனர். இன்னும் பத்லீ ஹஜ் செய்யச் சொல்பவர் தமத்துஃ செய்ய அனுமதியளித்தாலும் அவ்வாறு செய்யக் கூடாது என எழுதியுள்ளனர்.

ஆகையால், இக்கருத்து வேற்றுமையுள்ள பிரச்சினையிலிருந்து நீங்குவதற்குச் சிறந்த வழி என்னவென்றால், ஹஜ்ஜுடைய காலத்திற்கு நெருக்கமாக (— கடைசி கப்பலில் புறப்பட்டு)ச் சென்று ஹஜ்ஜெ இஃப்ராதுக்கு இஹ்ராம் கட்டி ஹஜ்ஜு செய்துவிட்டுத் திரும்பிவிட வேண்டும்.

தன்னுடைய ஃபர்ளான ஹஜ்ஜை நிறைவேற்றியிருப்ப வரை பத்லீ ஹஜ்ஜுக்கு அனுப்புவதுதான் சிறப்பாகும். தன் கடமையை நிறைவேற்றாத ஒருவரை பிறருடைய கடமையை நிறைவேற்ற அனுப்புவது நல்லதல்ல; மக்ரூஹ் ஆகும். எனினும், அவ்வாறு செய்தால் பத்லீ ஹஜ் நிறைவேறிவிடும்.

ஷாபியீ மத்ஹபில்... தன் கடமையை நிறைவேற்றாதவர் பிறருக்காக ஹஜ் செய்தல் செல்லாது.

பத்லீ ஹஜ் செய்பவர் மேற்கூறப்பட்ட சட்டங்களை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

யாருக்காக பத்லீ ஹஜ் செய்யப்படுகிறதோ அவர்மீது ஹஜ் கடமையாயிருந்து அவர் அதனைச் செய்யாமல் இறந்து விட்டிருக்க வேண்டும். அல்லது செய்ய முடியாத அளவுக்கு நோய்வாய்ப்பட்டிருக்க வேண்டும். அவர் மீது ஹஜ் கடமை யில்லாத ஒருவருக்காக பத்லீ ஹஜ் என்பது கிடையாது.

## துஆ கபூலாகும இடங்கள்

மக்கா முகர்ரமாவின் அனைத்து இடங்களும் துஆ ஏற்கப்படும் இடங்கள் தாம். எனினும், சில இடங்களில் பிரத்தியேகமாக துஆக்கள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. அவ்விடங்களில் குறிப்பாக துஆ செய்து கொள்ள வேண்டும். அவை:

1. கஃபாவைச் சுற்றியுள்ள தவாஃப் செய்யுமிடம்.

2. முல்தஜிம் (ஹஜ்ருல் அஸ்வதுக்கும் கஃபாவின் வாச லுக்கும் இடைப்பட்ட இடம்)

3. ஹதீமுக்குள் (குறிப்பாக 'மீஜாப்' என்னும் தண்ணீர் வழியும் தூம்புக்குக் கீழ்.)

4. கஃபாவின் உட்புறம்.

5. ஹஜருல் அஸ்வதுக்கருகில்.

6. கஃபாவின் வாசலுக்குமுன்.

*7. ருக்னெ யமானீ அருகில்.*

*8. கஃபாவின் பின்புறத் தலைவாசலுக்கருகில், (இப்பொ ழுது இருக்கும் வாசலுக்கு நேர் எதிரில் இருந்து, அது அடைக்கப்பட்டுவிட்டது.).*

*9. முதன்முதலில் கஃபாவின் மீது பார்வை விழும்பொ ழுது.*

*10. மகாமே இப்றாஹீம் அருகில்.*

*11. ஜம்ஜம் கிணற்றின் அருகில்.*

*12. ஸஃபா, மர்வா இருமலைக்குன்றுகளின் மீது.*

*13. ஸஃபா, மர்வாவிற்கிடையில் (குறிப்பாக இரு பச் சைத் தூண்களுக்கு மத்தியில்)*

*14. மினாவில் (குறிப்பாக மஸ்ஜிது கைபில்,)*

*15. கல்லெறியும் மூன்று இடங்களில்.*

*16. அரஃபாவில்.*

*17. முஜ்தலிஃபாவில் (குறிப்பாக மஷ்அருல் ஹறாம் என்ற இடத்தில்.)*

## தவாஃபுல் விதாஃ

ஹஜ்ஜை முடித்தபின் மக்காவில் இருக்கும் வரை ஹரம் ஷரீஃபில் ஜமாஅத்துடன் ஐந்து நேரமும் தொழுவதை முக்கிய மாகக் கடைப்பிடிக்க வேண்டும். தன்னுடைய சக்திக்குத் தக்கவாறு நஃபிலான தவாஃபுகளையும் உம்ராக்களையும் அதிகம் செய்ய வேண்டும். ஏனெனில், அந்த பாக்கியம் மறுமுறை எப்பொழுது கிடைக்குமோ! அல்லாஹ்வே அறி வான். முடிந்தால் நஃபிலான அந்த தவாஃப்கள், உம்ராக்களு டைய நன்மைகளை நம்முடைய பெற்றோர்கள், ஆசிரியர்கள், உறவினர்கள், பெரியோர்கள் ஆகியோருக்குச் சேர்த்து வைத் திட வேண்டும். இவை தவிர இன்னும் பல நற்காரியங்களைச் செய்து கொண்டிருக்க வேண்டும்.

பிறகு அங்கிருந்து மதீனாவிற்கோ அல்லது தன் ஊருக்கோ புறப்பட வேண்டிய தருணம் வந்து விட்டால் தவாஃபுல் விதாஃ (விடைபெறும் தவாஃப்) செய்துவிட்டு அங்கிருந்து புறப்பட வேண்டும். இந்தத் தவாஃபுடைய ஆரம்ப நேரம் தவாஃபெ ஜியாரத் செய்து முடித்த நேரமாகும்.

எவரேனும் ஒருவர் தவாஃபெ ஜியாரத் செய்து முடித்த பின் ஒரு நஃபிலான தவாஃப் செய்தால் அதுவே தவாஃபெ விதாஃ ஆகிவிடும். தவாஃபெ விதாஃ உடைய நிய்யத்து இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. எனினும், எல்லாக் காரியங்களையும் முடித்துக் கொண்டு மக்காவை விட்டுப் புறப்படும்போது தவாஃபெ விதாஃ செய்வதுதான் விரும்பத் தக்கதும் சிறப்புமாகும். இந்தத் தவாஃபுக்கு தவாஃபுஸ்ஸத்ரு, தவாஃபெ ருக்ஸத், தவாஃபெ வாஜிப் என்ற பெயர்களும் உண்டு.

## “தவாஃபெ விதாஃ” சில சட்டங்கள்

1. ஹஜ்ஜின் மூன்று வகைகளில் எதனைச் செய்தாலும் சரி, தவாஃபெ விதாஃ வெளியூர்க்காரர்களின் மீது வாஜிபாகும். ஹரம் எல்லைக்குள், அல்லது மீகாத்துடைய எல்லைக்குள் இருப்பவர்களுக்கு இது வாஜிபில்லை.

2. வெளியூர்க்காரர் தவாஃபெ ஜியாரத்திற்குப்பின் தவாஃபெ விதாஃ செய்யாமல், ஒரு நஃபிலான தவாஃபும் செய்யாமல் புறப்பட்டுச் சென்றுவிட்டால், இன்னும் அவர் மீக்காத்துடைய எல்லையைத் தாண்டிச் செல்லாமலிருந்தால், அவர் திரும்ப வந்து தவாஃபெ விதாஃ செய்வது வாஜிபாகும். மீக்காத்துடைய எல்லையைத் தாண்டிச் சென்றுவிட்டால் ஒரு 'தமு' கொடுப்பது அவர்மீது வாஜிபாகும். அல்லது மீக்காத் எல்லையைத் தாண்டிச் சென்றபின் உம்ராவிற்காக இஹ்ராம் கட்டிக்கொண்டு மீண்டும் வந்தால், முதலில் 'உம்ராவுடைய தவாஃப், ஸயீ ஆகியவற்றைச் செய்து முடித்தபின் தவாஃபெ விதாஃ செய்துவிட வேண்டும்.

3. ஹஜ்ஜு தவறிவிட்டவரின் மீது தவாஃபெ விதாஃ வாஜிபில்லை.

4. உம்ரா மட்டும் நிறைவேற்றுபவரின் மீதும் தவாஃபெ விதாஃ வாஜிபில்லை.

5. பைத்தியக்காரன், பருவமடையாதவர்கள் ஆகியோரின் மீதும் வாஜிபில்லை.

6. ஹைளு, நிஃபாஸ் உடைய பெண்கள் மக்காவை விட்டுப் புறப்படும் நேரம் வரை சுத்தமாக வில்லையானால் அவர்களுக்கு தவாஃபெ விதாஃ செய்வதை விட்டும் மன்னிப் பளிக்கப்படும். அத்தகைய பெண்கள் புறப்படும் சமயம் ஹரம் ஷரீஃபின் வாசலுக்கு முன்னால் வெளியே நின்று கொண்டு துஆ செய்து விட்டுப் புறப்பட வேண்டும். மஸ்ஜித் உள்ளே செல்லக் கூடாது.

7. இத்தகைய பெண்கள் மக்காவின் எல்லையை விட்டுத் தாண்டுவதற்கு முன் சுத்தமாகி விட்டால் திரும்ப வந்து தவாஃபுல் விதாஃ செய்வது வாஜிபாகும். மக்காவின் எல் லையை தாண்டிச் சென்றபின் சுத்தமானால் வாஜிபில்லை.

## தவாஃபுல் விதாஃ செய்முறை

இந்தத் தவாஃபில் ரமல் செய்வது கூடாது; இதற்குப் பின் ஸயீ செய்வதும் கிடையாது. ஆனால், தவாஃபுக்குப் பின் தவாஃபுடைய வாஜிபான இரண்டு ரக்அத்துகள் தொழ வேண்டும். தவாஃப் செய்து முடித்தபின் கிப்லாவை முன் னோக்கி இருந்து நன்கு வயிறு நிரம்ப ஜம்ஜம் நீரைக் குடிக்க வேண்டும். ஒவ்வொரு மிடறு குடித்து முடித்து மூச்சுவிடும் பொழுது கஃபாவைப் பார்த்துக் கொள்ள வேண்டும். தன்னு டைய முகம், தலை, உடல் ஆகியவற்றின் மீது ஜம் ஜம் நீரைத் தடவிக் கொள்ள வேண்டும். குடிக்கும்போது பின்வ ரும் பிரார்த்தனையைச் செய்ய வேண்டும்.

بِسْمِ اللّٰهِ وَالْحَمْدُ لِلّٰهِ وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰى
رَسُوْلِ اللّٰهِ اَللّٰهُمَّ اِنِّىْٓ اَسْئَلُكَ عِلْمًا نَّافِعًا وَّرِزْقًا
وَّاسِعًا وَّشِفَآءً مِّنْ كُلِّ دَآءٍ ط

அல்லாஹ்வின் திருநாமத்தால்... புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன. ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வுடைய தூதரின் மீது உண்டாவதாக! யா அல்லாஹ்! பலன் தரும் கல்வியையும் விசாலமான உணவையும் எல்லா நோய்களை விட்டு நிவாரணத்தையும் உன்னிடம் நான் வேண்டுகிறேன்.

அதன் பிறகு முல்தஜிம் அருகில் வந்து வலது கன்னத்தையும் நெஞ்சையும் கஃபாவுடைய சுவரின் மீது வைத்து, கைகளை கஃபாவுடைய வாசற்படியின் மீது வைத்து ஓர் அடிமை தன் எஜமானுடைய கால்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சுவது போல் தன்னுடைய குறைகளையும் பாவங்களையும் அல்லாஹ்விடம் முறையிட்டு மன்னிப்புத் தேடவேண்டும். (மக்கள் நெரிசல் இல்லாத நேரத்தில்தான் இவ்வாறெல்லாம் செய்ய வேண்டும்; நெரிசலாக இருந்தால் வசதிபோல் செய்து கொள்ள வேண்டும்.)

அவ்விடத்தில் நன்றாக அழ வேண்டும், அழுகை வரவில்லையானால் அழுவது போன்று பாவனை செய்திட வேண்டும். நல்ல முறையில் துஆ செய்ய வேண்டும். கவலை தோய்ந்த பார்வையாக கஃபாவைப் பார்க்க வேண்டும். இப்புனிதம் மிக்க இடத்தை விட்டுச் செல்கிறோம். இனி இவ்வித பாக்கியம் கிடைக்குமா? கிடைக்காதா? தெரியவில்லையே! என்ற கவலை இருக்க வேண்டும். பிறகு விதாஃ உடைய வாசல் வழியாக, அல்லது வேறு ஏதேனும் ஒரு வாசல் வழியாக மஸ்ஜிதை விட்டு வெளியே வந்து வாசலின் அருகில் நின்று பின்வருமாறு பிரார்த்தனை புரிய வேண்டும்!

اَلْحَمْدُ لِلّٰهِ حَمْدًا كَثِيْرًا طَيِّبًا مُّبَارَكًا فِيْهِ ط اَللّٰهُمَّ ارْزُقْنِى الْعَوْدَ بَعْدَ الْعَوْدِ الْمَرَّةَ بَعْدَ الْمَرَّةِ اِلٰى بَيْتِكَ الْحَرَامِ وَاجْعَلْنِىْ مِنَ الْمَقْبُوْلِيْنَ عِنْدَكَ يَا ذَا الْجَلَالِ وَالْاِكْرَامِ اَللّٰهُمَّ لَا تَجْعَلْهُ اٰخِرَ الْعَهْدِ مِنْ بَيْتِكَ الْحَرَامِ وَاِنْ جَعَلْتَهُ اٰخِرَ الْعَهْدِ فَعَوِّضْنِىْ عَنْهُ الْجَنَّةَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ ط

*ஏராளமான, மணம் மிக்க, அதில் பரக்கத்து செய்யப் பட்ட புகழானபுகழனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியன! யா அல்லாஹ், சங்கை மிக்க உன் திருவீட்டின் பக்கம் மீண்டும் மீண்டும் வருவதை — ஒரு தடவைக்குப் பின் மற்றொரு தடவை வருவதை — எனக்கு நீ அருள்வாயாக! மாண்பும் கண்ணியமும் உடையவனே! உன்னிடம் ஒப்புக் கொள்ளப்பட் டவர்களில் உள்ளவனாக என்னை நீ ஆக்கியருள்வாயாக! யா அல்லாஹ், சங்கைக்குரிய உன் வீட்டின் கடைசி வாக்குறுதி யாக இதனை நீ ஆக்கிவிடாதே. அவ்வாறு கடைசி வாக்குறுதி யாக இதனை நீ ஆக்கினால், சொர்க்கத்தை இதற்குப் பகரமாக எனக்கு நீ தந்தருள்வாயாக! கிருபையாளர்களில் மாபெரும் கிருபையாளனே! படைப்பினங்களில் மிகச்சிறந்த முஹம்மது (ஸல்) அவர்களின் மீதும் அன்னாரின் கிளையார்கள், தோழர் கள் அனைவரின் மீதும் ஸலவாத்துக் கூறுவாயாக!*

## "மஸ்ஜிதுந் நபவீ" ஜியாரத்தும் துஆக்களும்

*மஸ்ஜிதெ நபவீயை ஜியாரத்து செய்ய வேண்டுமென்ற துடிப்பும் ஆசையும் ஒவ்வொரு முஸ்லிமின் உள்ளத்திலும் இருந்து கொண்டிருக்கும். இது, இதற்கு ஆதாரம் ஏதும் தேவைப்படாத ஒரு விஷயமாகும். அதற்குக் காரணம் என்னவென்றால், அங்குதான் படைப்பினங்களின் தலைவர்*

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்க ளின் மஸ்ஜிதும் புனித ரவ்ளாவும் இருக்கின்றன.

எனவே, ஹஜ்ஜுக்குச் செல்லுகிறவர் மதீனா முனவ்வரா விற்கும் அவசியம் சென்று வரவேண்டும். இதனை ஆர்வ மூட்டி பல ஹதீஸ்கள் கூறப்பட்டுள்ளன.

இஸ்லாத்திற்கு முன் மதீனாவிற்குப் பெயர் 'யஸ்ரிப்' என்று இருந்தது. திருக் குர்ஆனில் ''யஸ்ரிப் வாசிகளே!'' என்று ஓரிடத்தில் அருளப்பட்டுள்ளது. ஆனால், ரஸுலுல் லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதனை மாற்றி மதீனா என்பதாக வைத்தார்கள். திருக் குர்ஆனில் ''மதீனா வாசிகளிலிருந்து'' என்ற வாசகமும் கூறப்பட்டுள்ளது.

ரஸுலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மதீனா முனவ்வராவுடன் விசேஷமான தொடர் பும் அன்பும் இருந்து வந்திருப்பதால், முஸ்லிம்களும் அதனை அன்பு வைப்பது இயல்பான ஒரு விஷயமாகும்.

''மதீனா என் ஹிஜ்ரத்துடைய இடமாகும்; என்னுடைய வாஃஸ்தலமும் அதில்தான்; கியாமத்து நாளில் நான் எழுப்பப் படும் இடமும் அதில்தான்'' என்று அருளியுள்ளார்கள்.

அந்த மதீனாவில்தான் நபி (ஸல்) அவர்கள் தங்களுடைய ஸஹாபாக்களுடன் சேர்ந்து தங்களின் புனிதமான கரங்களால் மஸ்ஜிதுந் நபவீயை நிர்மாணித்தார்கள். முதன்முதலாக தங்க ளின் திருக் கரத்தினால்தான் கல்லை எடுத்து வைத்தார்கள். அதன் பிறகு தங்களின் கலீஃபாக்கள், பிறகு மற்ற ஸஹாபாக் கள் பங்கு கொண்டனர்.

அந்த மஸ்ஜித் உலகிலுள்ள புனிதம் மிக்க மூன்று மஸ்ஜிதுகளில் ஒன்றாகும். இதுபற்றி நபி (ஸல்) அவர்கள்.

''(நன்மை கிடைக்கும் என்ற எண்ணத்தில்) மூன்று மஸ்ஜிதுகளுக்கே தவிர (வேறு எந்த மஸ்ஜிதிற்கும்) பிரயா ணச் சாமான்களைக் கட்டவேண்டாம்; மஸ்ஜிதுல் ஹராம்;

மஸ்ஜிதுல் அக்ஸா; இந்த என்னுடைய மஸ்ஜித்'' என அருளியுள்ளார்கள்.

அதாவது: இந்த மூன்று மஸ்ஜிதுகளை தரிசிப்பதற்காகச் செல்வது மட்டுமே நன்மைக்குரியதாகும். இவை அல்லாத மற்ற மஸ்ஜிதுகள் அனைத்தும் சமமானவை. அவற்றில் ஒன்றைவிட மற்றொன்று சிறந்தது, நன்மைக்குரியது என்பது கிடையாது; அந்த எண்ணத்தில் எந்த மஸ்ஜிதிற்கும் பிரயாணம் செய்வது கூடாது.

மேற்கூறப்பட்ட மூன்று மஸ்ஜிதுகளில், மஸ்ஜிதுல் ஹராமில் ஒரு தொழுகை ஓர் இலட்சம் நன்மைகளுடையதாகும்; மஸ்ஜிதுந் நபவீயில் ஒரு தொழுகை ஓர் ஆயிரம் நன்மைகளுடையதாகும்; மஸ்ஜிதுல் அக்ஸாவில் ஒரு தொழுகை ஐநூறு நன்மைகள் உடையதாகும்'' என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்த மஸ்ஜிதுந் நபவீ வெறும் மஸ்ஜித் மட்டுமல்ல; ஒருபுறம் இஸ்லாத்தின் போதனை மையமாகவும் கோட்டையாகவும் இருந்தது. மற்றொரு புறம் இஸ்லாத்தின் கல்வியைக் கற்றுக் கொடுப்பவர்களுக்கு முதலாம் பல்கலைக் கழகமாகத் திகழ்ந்தது. அது ஸுஃப்பா (SUFFA) என்ற பெயரால் பிரபலமாயிருக்கிறது. இதே மஸ்ஜிதில் தான் இஸ்லாமிய படைத்தலமும் இருந்தது. அதில்தான் இஸ்லாமிய வீர தியாகிகளுக்குப் போர்ப் பயிற்சியும் கொடுக்கப்பட்டு வந்தது.

இன்னும் அங்குதான் வழக்குகளைத் தீர்ப்பதற்குரிய மார்க்க நீதிமன்றமும் இருந்தது. அதே இடத்தில் தான் பிற மதத்தினரின் தூதுக் குழுவினர் நபி (ஸல்) அவர்களின் சந்நிதானத்திற்கு வந்து இஸ்லாத்தில் இணையும் சிறப்பையும் பெற்றனர். அந்த மஸ்ஜிதில் இப்பொழுதும் அந்தப் பகுதி இருந்து வருகிறது. அந்த இடத்தைக் குறித்துத்தான், ''என்னுடைய வீட்டிற்கும் என்னுடைய மிம்பருக்கும் மத்தியிலுள்ள இடமாகிறது சொர்க்கப் பூங்காக்களில் ஒரு பூங்காவாகும்'' என நபி (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

பொருளடக்கம்

ஆகையால், ஹாஜிகள் ஒவ்வொருவரும் ஹஜ்ஜை முடித்தபின் மஸ்ஜிதுந் நபவீயை ஜியாரத் செய்வதற்காக அவசியம் செல்ல வேண்டும். மதீனா செல்லும் வழியில் உளூவுடன் இருப்பதும் ஸலவாத்துச் சொல்லிக் கொண்டே செல்வதும் மிகச் சிறந்ததாகும்.

வழியில் பத்ரு என்னுமிடத்திற்குச் சென்றால், அங்கு நடைபெற்ற இஸ்லாத்தின் முதல் போரான பத்ருப் போரைப் பற்றி நினைவு கொள்ள வேண்டும். ரஸூலுல்லாஹி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், தியாகிகளான ஸஹாபாக்களும் அவ்விடத்தில் எவ்விதமான ஆயுத பலமுமின்றி ரமலான் மாதம் நோன்பு வைத்தநிலையில், அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தை நாடி, அவனுடைய தீன் நிலைத்திருப்பதற்காக எதிரிகளுடன் போர் புரிந்தனர். அங்கு அல்லாஹு தஆலா மகத்தான வெற்றியை அளித்தான். இதனைப் பற்றி அல்லாஹ் திரு குர்ஆனிலும் கூறியுள்ளான்.

அங்கு ஒரு மஸ்ஜிதும் பத்ருடைய ஷுஹதாக்கள் அடக்கப்பட்டுள்ள இடமும் இருக்கின்றன. முடிந்தால் அவ்விடத்தில் அவர்களுக்கு நன்மைகளைச் சேர்த்து வைக்கும் காரியங்களைச் செய்ய வேண்டும். அவர்களுக்குக் காணிக்கையாகப் பின்வருமாறு ஸலாம் கூறவேண்டும்.

اَلسَّلَامُ عَلَيْكُمْ يَا شُهَدَآءُ وَيَا سُعَدَآءُ اَلسَّلَامُ عَلَيْكُمْ بِمَا صَبَرْتُمْ فَنِعْمَ عُقْبَى الدَّارِ اَلسَّلَامُ عَلَيْكُمْ يَا شُهَدَآءَ بَدْرٍ كَافَّةً عَامَّةً وَّرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ

ஷுஹதாக்களே, பாக்கியவான்களே! உங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! நீங்கள் பொறுமையாக இருந்த காரணத்தினால் உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக! மறுமை வீடு (உங்களுக்கு) மிக நல்லதாகிவிட்டது. பத்ருடைய

தியாகிகளே! உங்கள் அனைவரின் மீதும் ஸலாம் உண்டாவதாக! அல்லாஹ்வுடைய ரஹ்மத்தும் அவனுடைய பரக்கத்துகளும் உண்டாவதாக!

மதீனா முனவ்வராவின் அருகினில் செல்லச் செல்ல அதிகமாக ஸலவாத்துக் கூற வேண்டும்; எவ்வளவு கண்ணியத்துடனும் மரியாதையுடன் இருக்க முடியுமோ அந்த அளவு இருக்க வேண்டும். அதில் குறைவு செய்யக் கூடாது.

மதீனாவில் நுழைவதற்கு முன் குளித்துக் கொள்ளுதல் முஸ்தஹப்பாகும். குளிக்க முடியவில்லையானால் உளு செய்து கொள்ள வேண்டும். சுத்தமான ஆடைகள் அணிந்து நறுமணம் பூசி மிக்க மரியாதையுடன் உள்ளே நுழைய வேண்டும். மதீனாவின் மீது முதலில் பார்வைபட்டவுடன் பின்வரும் துஆவை ஓதவேண்டும்.

اَللّٰهُمَّ هٰذَا حَرَمُ نَبِيِّكَ فَاجْعَلْهُ لِيْ وِقَايَةً مِّنَ النَّارِ وَاَمَانًا مِّنَ الْعَذَابِ وَسُوْٓءِ الْحِسَابِ

யா அல்லாஹ், இது உன்னுடைய நபியவர்களின் ஹரமாகும். இதனை எனக்கு நரகை விட்டுப் பாதுகாப்பாகவும் வேதனையை விட்டும் தீய கேள்வி கணக்கை விட்டும் அபயமாகவும் ஆக்கியருள்வாயாக!

## மஸ்ஜிதுந் நபவீயில் நுழைவதின் ஒழுக்கம்

மதீனாவினுள் சென்றவுடன் முதன் முதலாக மஸ்ஜிதுந் நபவீக்குச் செல்ல முயற்சிக்க வேண்டும். மஸ்ஜிதில் (பாபு ஜிப்ரீல்) ஜிப்ரீல் வாசல் வழியாக நுழைவது நல்லதாகும். நுழையும்போது பின்வரும் துஆவை ஓதவேண்டும்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَّصَحْبِهٖ وَسَلِّمْ

பொருளடக்கம்

اَللّٰهُمَّ اغْفِرْلِيْ ذُنُوْبِيْ وَافْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ ؕ

*யா அல்லாஹ், முஹம்மது (ஸல்) அவர்களின் மீதும் அவர்களுடைய தோழர்களின் மீதும் நீ ஸலவாத்தும் ஸலாமும் கூறுவாயாக! யா அல்லாஹ், என் பாவங்களை எனக்கு மன்னித்து, உன்னுடைய அருள் வாசல்களை எனக்குத் திறந்து விடுவாயாக!*

மஸ்ஜிதுந் நபவீயில் நுழைந்த பின் மிம்பருக்கும் ரவ்ளாவுக்கும் இடையிலுள்ள சொர்க்கப் பூங்காவாகிய இடத்தில், மக்ரூஹான நேரமில்லாவிட்டால் (இரண்டு) ரக்அத் தஹிய்யத்துல் மஸ்ஜித் நஃபில் தொழவேண்டும். அதில் முதல் ரக்அத்தில் அல்ஹம்துக்குப்பின் குல் யாஅய்யுஹல் காஃபிரூன் ஸூராவும் இரண்டாம் ரக்அத்தில் குல்ஹுவல்லாஹு ஸூராவும் ஓதவேண்டும். சொர்க்கப் பூங்காவாகிய அந்த இடத்தில் இடம் கிடைக்கவில்லையானால் மஸ்ஜிதில் எந்த இடத்தில் வேண்டுமானாலும் தொழலாம். பிறகு அல்லாஹுதஆலா இவ்வளவு பெரிய பாக்கியத்தை அருளியதற்காக அவனுக்கு நன்றி செலுத்த வேண்டும்.

மஸ்ஜிதுந் நபவீயில் நுழையும்போது ஃபர்ளு தொழுகையின் ஜமாஅத்து நடந்து கொண்டிருந்தால் அதில்தான் சேர்ந்து கொள்ள வேண்டும்; அதிலேயே தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழுகையும் நிறைவேறிவிடும். தனியாக தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழ வேண்டிய அவசியமில்லை.

மதீனா முனவ்வராவில் தங்கியிருக்கும் நாட்களில் ஜமாஅத்துடன் — தக்பீர் தஹ்ரீமாவுடன் — தொழுவதில் மிக கவனமாக இருந்து வரவேண்டும். ஏனெனில், ''அதில் ஒரு தொழுகை மற்ற மஸ்ஜிதுகளில் ஆயிரம் தொழுகைக்குச் சமமாகும்; ஆனால், மஸ்ஜிதுல் ஹராமைத் தவிர, மஸ்ஜிதுல் ஹராமில் ஒரு தொழுகை மஸ்ஜிதுந் நபவீயில் நூறு தொழுகைக்குச் சமமாகும். (அதாவது: மற்ற மஸ்ஜிதுகளில் தொழுவதை விட ஓரிலட்சம் நன்மைகள் உடையதாகும்.)'' என்று ஒரு ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

## ரவ்ளாவில் ஸலாம் கூறும் முறை

தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழுது முடித்தபின் ரவ்ளா ஷரீஃபிற்கு வந்து, தலைமாட்டுப் பாகத்தில், முகத்தை ரவ்ளா ஷரீஃபை நோக்கியும் கிப்லாவின் பக்கம் முதுகைத் திருப்பி யும் நின்று, மிக்க மரியாதையுடன் பார்வையைக் கீழே தாழ்த்தி ஸலாம் கூறவேண்டும். அங்கு சென்ற பின் இந்த முறைகளை நன்றாகத் தெரிந்து கொள்ளலாம்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களுடைய ரவ்ளாவில் கிப்லாவை முன்னோக்கிப் படுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற எண்ணம் ஸலாம் கூறும்போது ஏற்பட வேண்டும். அதிகமாக சப்தமிடாமலும் அழுது கதறாமலும் ஸலாம் கூறவேண்டும். ஏனெனில், இவையெல்லாம் ஒழுக்கமற்ற செயல்களாகும். எனவே, தாழ்ந்த குரலில் மெதுவாக, பின்வருமாறு ஸலாம் கூற வேண்டும்.

اَلسَّلَامُ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ السَّيِّدُ الْكَرِيْمُ وَالرَّسُوْلُ
الْعَظِيْمُ الرَّؤُوْفُ الرَّحِيْمُ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ
اَلصَّلٰوةُ وَالسَّلَامُ عَلَيْكَ يَارَسُوْلَ اللّٰهِ اَلصَّلٰوةُ
وَالسَّلَامُ عَلَيْكَ يَا حَبِيْبَ اللّٰهِ اَلصَّلٰوةُ وَالسَّلَامُ عَلَيْكَ
يَا خَيْرَ خَلْقِ اللّٰهِ اَلصَّلٰوةُ وَالسَّلَامُ عَلَيْكَ يَا مَنْ اَرْسَلَهُ
اللّٰهُ تَعَالٰى رَحْمَةً لِّلْعَالَمِيْنَ اَلصَّلٰوةُ وَالسَّلَامُ عَلَيْكَ
يَا خَاتَمَ النَّبِيِّيْنَ اَنْتَ الْحَبِيْبُ يَا حَبِيْبَ اللّٰهِ اَشْهَدُ اَنَّكَ

يَا رَسُوْلَ اللّٰهِ قَدْ بَلَّغْتَ الرِّسَالَةَ وَاَدَّيْتَ الْاَمَانَةَ وَنَصَحْتَ
الْاُمَّةَ، وَجَاهَدْتَ فِيْ سَبِيْلِ اللّٰهِ حَقَّ جِهَادِهٖ وَعَبَدْتَ
رَبَّكَ حَتّٰى يَاْتِيَكَ الْيَقِيْنُ جَزَاكَ اللّٰهُ تَعَالٰى عَنَّا وَعَنْ
وَالِدِيْنَا وَعَنِ الْاِسْلَامِ خَيْرَ الْجَزَآءِ، اَلصَّلٰوةُ وَالسَّلَامُ
عَلَيْكَ يَا سُلْطَانَ الْاَنْبِيَآءِ وَالْمُرْسَلِيْنَ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهٗ

நபியவர்களே! சங்கைக்குரிய தலைவரவர்களே! மகத்துவம் மிக்க (அல்லாஹ்வின்) தூதரவர்களே! இரக்கமுள்ளவர்களே! அருளானவர்களே! தங்களின் மீது ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் அவனுடைய பரக்கத்துகளும் உண்டாவதாக! அல்லாஹ்வின் தூதரவர்களே! தங்களின் மீது ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக! அல்லாஹ்வின் பிரிய நேசரவர்களே! தங்களின் மீது ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக! அல்லாஹ்வின் படைப்புகளில் சிறந்தவரே! தங்களின் மீது ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக! அகிலத்தாருக்கு அருட்கொடையாக அல்லாஹ் அனுப்பியவரே! தங்களின் மீது ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக! நபிமார்களில் இறுதியானவரே! தங்களின் மீது ஸலவாத்தும் ஸலாமும் உண்டாவதாக!

யா ரஸூலல்லாஹ்! தூதுத்துவத்தை (உம்மத்தினருக்கு) உறுதியாக எத்திவைத்து விட்டீர் என்பதாகவும், அமானிதத்தை நிறைவேற்றினீர் என்பதாகவும், உம்மத்தினருக்கு உபதேசம் புரிந்தீர் என்பதாகவும், அல்லாஹ்வின் பாதையில் உண்மையான போரிடுதலாக போர் புரிந்தீர் என்பதாகவும், தங்களுக்கு மரணம் வரும்வரை தங்களின் ரப்பை வணங்கினீர் என்பதாகவும் நான் சாட்சி கூறுகிறேன்.

அல்லாஹு தஆலா எங்களின் சார்பாகவும், எங்கள் பெற்றோர்களின் சார்பாகவும், இஸ்லாத்தின் சார்பாகவும் தங்களுக்குச் சிறந்த நற்கூலியைத் தந்தருள்வானாக! நபிமார்கள் ரஸூல்மார்கள் அனைவருக்கும் சக்ரவர்த்தியானவரே! தங்களின் மீது ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் அவனுடைய பரக்கத்துகளும் உண்டாவதாக!

அரபி மொழி தெரியாத ஹாஜிகள் பலர் தங்களுடைய மொழிகளில் ஸலாம் கூறும்பொழுது உச்சரிப்புகள் சரியாக இல்லாமல் அர்த்தம் மாறிவிடுகின்ற அளவுக்குத் தவறு செய்து விடுகின்றனர். எனவே, மேற்கூறப்பட்ட அரபி வாசகத்தை நன்றாக உச்சரிப்பு தெரிந்து கூறவேண்டும். தெரியாதவர்கள் பின்வரும் சுருக்கமான ஸலாமையாவது நல்ல ஆசையுடனும் பாசத்துடனும் கூறவேண்டும்.

اَلسَّلَامُ عَلَيْكَ يَارَسُوْلَ اللّٰهِ

## மற்றவரின் ஸலாமை எத்திவைக்குதல்

மற்றவர் எவரேனும் நபி (ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறும்படி நம்மிடம் சொன்னால், நாம் ஸலாம் கூறியபின் பின்வருமாறு கூறவேண்டும்:

"யா ரஸூலல்லாஹ்! இன்னாருடைய மகன் இன்னாரிலிருந்து தங்கள் மீது ஸலாம் உண்டாவதாக!" என்று சொல்ல வேண்டும். இன்னார் என்ற இடத்தில் சொல்லி அனுப்பியவரின் பெயரைக் கூற வேண்டும். பல நபர்கள் ஸலாம் சொல்லி அனுப்பியிருந்தால் — அவர்களின் பெயர்கள் நினைவில்லையானால் — அவர்களின் சார்பில் பின்வருமாறு ஸலாம் சொல்ல வேண்டும்.

 

اَلسَّلَامُ عَلَيْكَ يَارَسُوْلَ اللّٰهِ مِنْ جَمِيْعِ مَنْ اَوْصَانِىْ بِالسَّلَامِ عَلَيْكَ

''யா ரஸூலல்லாஹ்! தங்களுக்கு ஸலாம் சொல்லுமாறு என்னிடம் கூறிய அனைவரின் சார்பிலும் தங்கள் மீது ஸலாம் உண்டாவதாக!''

## அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களுக்கு ஸலாம் கூறும் முறை

ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் முதலாவது கலீஃபா. நபியவர்களுக்கு இடப்பக்க விலாப்புறத்தில் அடக்கப்பட்டுள்ளார்கள். அவர்களின் தலை நபி (ஸல்) அவர்களுடைய இடது தோளுக்கு நேராக இருக்கிறது. நபியவர்களுக்கு ஸலாம் கூறியபின் ஒரு முழம் வலப்பக்கம் தள்ளி நின்று பின்வருமாறு ஸலாம் கூறவேண்டும்.

اَلسَّلَامُ عَلَيْكَ يَاسَيِّدَنَا اَبَابَكْرِ الصِّدِّيْقِ ۝ اَلسَّلَامُ عَلَيْكَ يَاخَلِيْفَةَ رَسُوْلِ اللّٰهِ عَلَى التَّحْقِيْقِ ۝ اَلسَّلَامُ عَلَيْكَ يَاصَاحِبَ رَسُوْلِ اللّٰهِ ثَانِىَ اثْنَيْنِ اِذْ هُمَا فِى الْغَارِ ۝ اَلسَّلَامُ عَلَيْكَ يَامَنْ اَنْفَقَ مَالَهُ كُلَّهُ فِىْ حُبِّ اللّٰهِ وَحُبِّ رَسُوْلِهِ حَتّٰى تَخَلَّلَ بِالْعَبَاءِ. رَضِىَ اللّٰهُ

تَعَالٰى عَنْكَ وَاَرْضَاكَ اَحْسَنَ الرِّضَا وَجَعَلَ الْجَنَّةَ
مَنْزِلَكَ وَمَسْكَنَكَ وَمَحَلَّكَ وَمَأْوٰكَ اَلسَّلَامُ عَلَيْكَ
يَا اَوَّلَ الْخُلَفَاءِ الرَّاشِدِيْنَ وَتَاجَ الْعُلَمَاءِ وَصِهْرَ
النَّبِيِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهٗ ط

எங்களின் தலைவர் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களே! தங்கள் மீது ஸலாம் உண்டாவதாக! உறுதியான முறையில் ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்களின் பிரதிநிதியவர்களே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! இருவர் குகையில் இருந்த பொழுது இருவரில் இரண்டாவதாக இருந்த ரஸூலின் தோழரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! தன்னுடைய பொருட்கள் அனைத்தையும் அல்லாஹ்வின் விருப்பத்திலும் அவன் ரஸூலுடைய விருப்பத்திலும் செலவு செய்து, தன் உடலில் ஒரு அபா—நீண்ட அங்கி—மட்டும் இருக்குமளவுக்கு தியாகம் செய்தவரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக!

அல்லாஹு தஆலா தங்களைப் பொருந்திக் கொள்வானாக! மிக அழகிய பொருந்துதலாக தங்களைப் பொருந்தச் செய்வானாக! சொர்க்கத்தை தங்களின் தங்குமிடமாக, குடியிருக்குமிடமாக, இறங்குமிடமாக, ஒதுங்குமிடமாக ஆக்கியருள்வானாக! முதல் கலீஃபா அவர்களே! ஆலிம்களுக்கு கிரீடமானவரே! நபி (ஸல்) அவர்களின் மாமனார் அவர்களே! தங்களின் மீது ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் அவனுடைய பரக்கத்துகளும் உண்டாவதாக!

## உமர் (ரலி) அவர்களுக்கு ஸலாம் கூறுதல்

ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் நபியவர்களின் இரண்டாம்

 

கலீஃபா. அவர்களும் நபி (ஸல்) அவர்களின் இடப்புறத்தில் அடக்கப்பட்டுள்ளார்கள். அன்னார் தலைப்பகுதி அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களுடைய தோளுக்கு நேராக இருக்கிறது. அபூபக்கர் (ரலி) அவர்களுடைய ஜியாரத்தை முடித்தபின் வலப்பக்கம் ஒரு முழம் தள்ளி நின்று பின்வருமாறு ஸலாம் கூறவேண்டும்.

اَلسَّلَامُ عَلَيْكَ يَا عُمَرَ بْنَ الْخَطَّابِ ۚ اَلسَّلَامُ عَلَيْكَ يَا نَاطِقًا بِالْعَدْلِ وَالصَّوَابِ ۚ اَلسَّلَامُ عَلَيْكَ يَا حَنَفِيَّ الْمِحْرَابِ ۚ اَلسَّلَامُ عَلَيْكَ يَا مُظْهِرَ دِيْنِ الْاِسْلَامِ ۚ اَلسَّلَامُ عَلَيْكَ يَا مُكَسِّرَ الْاَصْنَامِ ۚ اَلسَّلَامُ عَلَيْكَ يَا اَبَا الْفُقَرَآءِ وَالضُّعَفَآءِ وَالْاَرَامِلِ وَالْاَيْتَامِ اَنْتَ الَّذِىْ قَالَ فِىْ حَقِّكَ سَيِّدُ الْبَشَرِ لَوْ كَانَ بَعْدِىْ نَبِيًّا لَكَانَ عُمَرَ بْنَ الْخَطَّابِ ۚ رَضِىَ اللّٰهُ تَعَالٰى عَنْكَ وَاَرْضَاكَ اَحْسَنَ الرِّضَا وَجَعَلَ الْجَنَّةَ مَنْزِلَكَ وَمَحَلَّكَ وَمَسْكَنَكَ وَمَاْوٰكَ ۚ اَلسَّلَامُ عَلَيْكَ يَا ثَانِىَ الْخُلَفَآءِ الرَّاشِدِيْنَ وَتَاجَ الْعُلَمَآءِ وَصِهْرَ النَّبِىِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهٗ

உமருப்னுல் கத்தாப் (ரலி) அவர்களே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! நீதியாக — நேர்மையாகப் பேசுபவரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! மிஹ்ராபை

அலங்கரித்தவரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! தீனுல் இஸ்லாத்தை வெளியாக்கியவரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! சிலைகளை உடைத்தெறிந்தவரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! ஏழைகளுக்கும் பலவீன ருக்கும் கைம்பெண்களுக்கும் அனாதைகளுக்கும் தந்தையாய் இருந்தவரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக, உம்மு டைய விஷயத்தில் தான் நபி (ஸல்) அவர்கள், "எனக்குப் பின்னால் நபியிருந்தால் அவர் உமருப்னுல் கத்தாபாக இருப் பார்" என்று கூறியுள்ளார்கள்.

அல்லாஹு தஆலா தங்களைப் பொருந்திக் கொள்வா னாக! அழகிய பொருந்துதலாக தங்களைப் பொருந்தச் செய்வானாக! சொர்க்கத்தைத் தங்களின் தங்குமிடமாக, இறங் குமிடமாக, குடியிருப்பாக, ஒதுங்குமிடமாக ஆக்கி வைப்பா னாக! இரண்டாம் கலீஃபா அவர்களே! ஆலிம்களின் கிரீடமா னவரே! நபி (ஸல்) அவர்களின் மாமனார் அவர்களே! தங்களின் மீது ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் அவனு டைய பரக்கத்துகளும் உண்டாவதாக!

பிறகு அபூபக்கர் ஸித்தீக் (ரலி), உமர் (ரலி) ஆகிய இருவருக்கும் நடுவில் நின்று கொண்டு பின்வருமாறு ஸலாம் கூறவேண்டும்.

اَلسَّلَامُ عَلَيْكُمَا يَاوَزِيْرَىْ رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ

اَلسَّلَامُ عَلَيْكُمَا يَامُعِيْنَىْ رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ

اَلسَّلَامُ عَلَيْكُمَا وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهٗ

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இரு அமைச்சர்களே! தங்களிருவரின் மீதும் ஸலாம் உண்டாவதாக! ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இரு உதவியாளர்களே!

தங்களிருவரின் மீதும் ஸலாம் உண்டாவதாக! தங்களிருவரின் மீதும் ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் அவனுடைய பரக்கத்துகளும் உண்டாவதாக!

பிறகு கிப்லாவை முன்னோக்கி இருந்து பின்வரும் பிரார்த்தனையைச் செய்ய வேண்டும்.

اَللّٰهُمَّ لَا تَدَعْ لَنَا فِيْ مَقَامِنَا هٰذَا الشَّرِيْفِ بَيْنَ يَدَيْ سَيِّدِنَا
رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ ذَنْبًا اِلَّا غَفَرْتَهٗ
وَلَا هَمًّا اِلَّا فَرَّجْتَهٗ وَلَا عَيْبًا اِلَّا سَتَرْتَهٗ وَلَا مَرِيْضًا
اِلَّا شَفَيْتَهٗ وَعَافَيْتَهٗ وَلَا مُسَافِرًا اِلَّا نَجَّيْتَهٗ وَلَا غَائِبًا
اِلَّا رَدَدْتَّهٗ وَلَا عَدُوًّا اِلَّا خَذَلْتَهٗ وَدَمَّرْتَهٗ وَلَا فَقِيْرًا
اِلَّا اَغْنَيْتَهٗ وَلَا حَاجَةً مِّنْ حَوَآئِجِ الدُّنْيَا وَالْاٰخِرَةِ لَنَا
فِيْهَا صَلَاحٌ اِلَّا قَضَيْتَهَا وَيَسَّرْتَهَا ۔ اَللّٰهُمَّ اقْضِ
حَوَآئِجَنَا وَيَسِّرْ اُمُوْرَنَا وَاشْرَحْ صُدُوْرَنَا وَتَقَبَّلْ زِيَارَتَنَا
وَاٰمِنْ خَوْفَنَا وَاسْتُرْ عُيُوْبَنَا وَاغْفِرْ ذُنُوْبَنَا وَاكْشِفْ
كُرُوْبَنَا وَاخْتِمْ بِالصَّالِحَاتِ اَعْمَالَنَا وَرُدَّ غُرْبَتَنَا
اِلٰى اَهْلِنَا وَاَوْلَادِنَا سَالِمِيْنَ غَانِمِيْنَ مَسْتُوْرِيْنَ

وَاجْعَلْنَا مِنْ عِبَادِكَ الصَّالِحِيْنَ مِنَ الَّذِيْنَ لَاخَوْفٌ عَلَيْهِمْ وَلَاهُمْ يَحْزَنُوْنَ ۝ بِرَحْمَتِكَ يَآاَرْحَمَ الرَّاحِمِيْنَ ۝ يَارَبَّ الْعَالَمِيْنَ ۝

யா அல்லாஹ், எங்கள் தலைவர் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முன்னிலையில் சிறப்புமிக்க எங்களின் இவ்விடத்தில் எந்தப் பாவத்தையும் எங்களுக்கு நீ மன்னிக்காமல் விட்டுவிடாதே! யா அல்லாஹ்! எந்தக் கவலையையும் நீ நீக்காமல், எந்தக் குறையையும் நீ மறைக்காமல், எந்த நோயாளியையும் நீ குணப்படுத்தி சுகமளிக்காமல், எந்த பிரயாணியையும் நீ காப்பாற்றாமல், (காணாமல்) மறைந்தது எதனையும் நீ திருப்பித் தராமல், எந்த எதிரியையும் நீ கேவலப்படுத்தாமல், நாசமாக்காமல், எந்த ஏழையையும் நீ தேவையற்றவராக்காமல் இம்மை மறுமையின் தேவைகளில் எங்களுக்கு நன்மையுள்ள எந்தத் தேவையையும் நீ நிறைவேற்றாமல், அதனை எளிதாக்காமல் நீ விட்டுவிடாதே!

யா அல்லாஹ், எங்களின் தேவைகளை நீ நிறைவேற்றி, எங்கள் காரியங்களை இலேசாக்கி வைத்து, எங்கள் நெஞ்சங்களை விரிவடையச் செய்து, எங்கள் ஜியாரத்தை ஏற்று, எங்களின் பயத்தை அச்சமற்றதாக்கி, எங்கள் குறைகளை மறைத்து, எங்களின் பாவங்களை மன்னித்து, எங்களின் சிரமங்களை குறைத்து, எங்கள் செயல்களை நல்லவற்றைக் கொண்டு முடிவாக்கித் தந்தருள்வாயாக!

நாங்கள் சுகமுடையவர்களாக, இலாபமடைந்தவர்களாக, பாவங்கள் மறைக்கப்பட்டவர்களாக இருக்கும் நிலையில் எங்களுடைய தனிமைப் பயணத்தை எங்கள் குடும்பத்தாரின் பால், எங்கள் மக்களின்பால் நீ திருப்பி வைப்பாயாக! எங்களை உன் நல்லடியார்களில் உள்ளவர்களாக ஆக்கியருள்

வாயாக! கிருபையாளர்களில் மாபெரும் கிருபையாளனே! அகிலத்தாரின் இரட்சகனே! உன்னுடைய அருளால், எவர்க ளின் மீது பயமில்லையோ, எவர்கள் கவலைப்பட மாட்டார் களோ அத்தகையோரில் உள்ளவர்களாக எங்களை ஆக்கியருள் வாயாக!

## அருள் பொழியும் தூண்கள்

மஸ்ஜிதுந் நபவீ உடைய பழைய பகுதியில் சில தூண்கள் இருக்கின்றன. அவை அனைத்தும் 'சொர்க்கத்தின் பூங்கா' பகுதியில் இப்பொழுதும் இருக்கின்றன. அவற்றைப் பற்றிய சுருக்கமான விளக்கம் இங்கு கூறப்படுகிறது.

1. உஸ்துவானெ ஹன்னானா: — (அழுது முனகும்தூண்) இந்தத் தூண் இருக்குமிடத்தில்தான் நபி (ஸல்) அவர்கள் நின்று குத்பா (பிரசங்கம்) நிகழ்த்திய பேரீச்ச மரக்கட்டை இருந்தது. மிம்பர் செய்தபின் அதன்மீது நபியவர்கள் நின்று குத்பா நிகழ்த்தியபோது அப்பேரீச்ச மரக்கட்டை சப்தமிட்டு அழுதது. நபி (ஸல்) அவர்கள் மிம்பரிலிருந்து கீழிறங்கி வந்து தங்களின் திருக்கரத்தை அதன்மீது வைத்த பிறகுதான் அது தன் அழுகையை நிறுத்தியது.

2. உஸ்துவானெ ஹர்ஸ்: (பாதுகாப்புத் தூண்) ரஸூலுல் லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களின் இல்லத்திற்குச் செல்லும்போது எவரேனும் ஒரு ஸஹாபீ நபியவர்களின் பாதுகாப்பிற்காக அதன் அருகில் உட்கார்ந்திருப்பார்.

3. உஸ்துவானெ வுஃபூத்: — (தூதுக் குழுவினர் தூண்) வெளியூர்களிலிருந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லம் அவர்களைக் காண வருகின்றவர்கள், அல்லது இஸ் லாத்தை ஏற்றுக் கொள்ள வருகிறவர்கள் இதனருகில் உட் கார்ந்து நபி (ஸல்) அவர்களின் பேச்சைக் கேட்பார்கள்; இஸ்லாத்தை ஏற்பார்கள்.

4. உஸ்துவானெ அபீ லுபாபா: (அபூ லுபாபாவுடைய தூண்.) அபூ லுபாபா (ரலி) அவர்கள் பிரபலமான ஸஹாபியா வார்கள். அன்னார் ஒரு தடவை இஸ்லாத்தின் ரகசியத்தை யூதர்களுக்குத் தெரியப்படுத்தி விட்டார். இது கடுங்குற்றமென உணர்ந்த அவர்கள் தம்மைத் தாமே அந்தத் தூணில் கட்டி வைத்துக் கொண்டு, நபி (ஸல்) அவர்கள் தங்களுடைய திருக்கரத்தினால் என்னை அவிழ்த்துவிடும் வரை நான் இதனை அவிழ்த்துக் கொள்ள மாட்டேன் என்று சபதம் செய்து கொண்டார். பிறகு வஹீ அறிவிக்கப்பட்டதின் பேரில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர் கள் தங்களின் முபாரக்கான கரத்தினால் அவிழ்த்துவிட்டார்கள்.

5. உஸ்துவானெ ஸரீர்: (கட்டிலின் தூண்) நபி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஃதிகாப் இருக்கும் பொழுது இந்தத் தூணின் அருகில் கட்டில்போன்ற ஏதேனும் ஒன்றைப் போட்டு படுத்துக் கொள்வார்கள்.

6. உஸ்துவானெ ஜிப்ரீல்: (ஜிப்ரீலின் தூண்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வஹீ கொண்டு வரும்பொழுது பெரும்பா லும் இந்த இடத்தில்தான் வந்து அமருவார்கள். (இந்தத் தூண் இப்பொழுது நபி (ஸல்) அவர்களின் அறைக்குள் இருப்பதா கக் கூறப்பட்டுள்ளது.)

7. உஸ்துவானெ ஆயிஷா: (ஆயிஷாவின் தூண்) "என்னு டைய இந்த மஸ்ஜிதில் ஓர் இடம் இருக்கிறது. அவ்விடத்தில் தொழுவதால் எவ்வளவு அதிகமான நன்மைகள் இருக்கின்றன வென்று மக்களுக்குத் தெரிந்தால், சீட்டுக் குலுக்கிப் போட வேண்டிய நிலை ஏற்பட்டு விடும்" என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருந்தார் கள். அந்த இடம் எது என்பதைத் தெரிந்து கொள்ள ஸஹாபாக்கள் பெரும் ஆவலாயிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களுடைய மரணத்திற்குப் பின் ஆயிஷா (ரலி) அவர்கள் தங்களுடைய சகோதரியின் மகன் அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரலி) அவர்களுக்கு அதனைக் காட்டித் தந்தார்கள். எனவே, இது ஆயிஷாவின் தூண் எனப் பெயர் பெற்றது.

இந்த எல்லாத் தூண்களின் மீதும் பெயர் எழுதப்பட்டுள்ளது. இவற்றிற்கு 'ரஹ்மத்துடைய தூண்கள்' என்பதாகக் கூறப்படும். மதீனாவில் தங்கியிருக்கும் நாட்களில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் ரவ்ளாவுக்குச் சென்று ஸலவாத்து, ஸலாம் சொல்ல வேண்டும்; இந்தத் தூண்களுக்கருகில் நஃபில் தொழுது வரவேண்டும்; அதிகமாக துஆ செய்ய வேண்டும். இந்தத் தூண்களுக்கு அருகிலிருக்கும் போது விவரிக்க முடியாத அளவுக்கு ஈமானிலும் ரூஹிலும் மலர்ச்சியும் மகிழ்ச்சியும் உண்டாகிறது. அல்லாஹு தஆலா ஒவ்வொரு முஸ்லிமிற்கும் அந்த பாக்கியத்தை தந்தருள்வானாக!

## மதீனாவின் புனித இடங்கள்

ஜன்னத்துல் பகீஃ: இது மதீனா முனவ்வராவின் கப்ருஸ்தான். இதில்தான் நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய பெரும்பாலான மனைவிமார்களும் அன்னாரின் திருமகனார் இப்றாஹீம் (ரலி) அவர்களும், அன்னாரின் திருமகளார் ஃபாத்திமா (ரலி-அன்ஹா) அவர்களும், அன்னாரின் சிறிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களும், ஹஜ்ரத் உஸ்மான் (ரலி) அவர்களும் மற்றும் சுமார் பத்தாயிரம் ஸஹாபாக்களும் மிக முக்கியமான வலிமார்களும் அடக்கப் பெற்றுள்ளனர்.

''கியாமத்து நாளில் பௌர்ணமி நிலவைப் போன்று இலங்குகின்ற முகங்களைக் கொண்டவர்களாக எழுபதினாயிரம் நபர்கள் இந்த கப்ருஸ்தானிலிருந்து எழுப்பப்பட்டு, எவ்வித் கேள்வி கணக்குமின்றி சொர்க்கம் பிரவேசிப்பார்கள்'' என்று ஒரு ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரவு நேரங்களில் பெரும்பாலும் இந்த கப்ருஸ்தானுக்குச் செல்லும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். ஆகையால், மதீனாவில் தங்கியிருக்கும் காலத்தில் தினந்தோ

றும், அல்லது ஜுமுஆ நாளில் அங்கு சென்று பின்வருமாறு ஸலாம் கூறுவது (துஆ செய்வது) ஹாஜிகளுக்கு அவசியமாகும்.

اَلسَّلَامُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُّؤْمِنِيْنَ وَاٰتَاكُمْ مَاتُوْعَدُوْنَ غَدًا مُّؤَجَّلُوْنَ وَاِنَّا اِنْ شَاءَ اللّٰهُ بِكُمْ لَاحِقُوْنَ ط اَللّٰهُمَّ اغْفِرْ لِاَهْلِ الْبَقِيْعِ الْغَرْقَدِ ط

முஃமின்களாகிய வீட்டுக்காரர்களே! உங்களின் மீது சாந்தி உண்டாவதாக! நீங்கள் வாக்களிக்கப்பட்டது உங்களுக்கு வந்துவிட்டது. நாளை மறுமை வரை நீங்கள் தவணை கொடுக்கப்பட்டவர்களாக இருக்கிறீர்கள். நிச்சயமாக நாங்களும் இன்ஷா அல்லாஹ் உங்களுடன் வந்து சேருகின்றவர்கள் தாம். யா அல்லாஹ், இந்த பகீஃ வாசிகளுக்கு நீ மன்னிப்பை அருள்வாயாக!

## ஹஜ்ரத் உஸ்மான் (ரலி) அவர்களுக்கு ஸலாம் கூறுதல்

اَلسَّلَامُ عَلَيْكَ يَا سَيِّدَنَا عُثْمَانَ بْنِ عَفَّانَ ط اَلسَّلَامُ عَلَيْكَ يَا مَنِ اسْتَحْيَيَتْ مِنْكَ مَلٰئِكَةُ الرَّحْمٰنِ ط اَلسَّلَامُ عَلَيْكَ يَا مَنْ زَيَّنَ الْقُرْاٰنَ بِتِلَاوَتِهٖ وَنَوَّرَ الْمِحْرَابَ بِاِمَامَتِهٖ وَسِرَاجُ اللّٰهِ تَعَالٰى فِى الْجَنَّةِ ط اَلسَّلَامُ عَلَيْكَ

يَاثَالِثَ الْخُلَفَاءِ الرَّاشِدِيْنَ رَضِيَ اللّٰهُ عَنْكَ وَأَرْضَاكَ أَحْسَنَ الرِّضَا وَجَعَلَ الْجَنَّةَ مَنْزِلَكَ وَمَسْكَنَكَ وَمَحَلَّكَ وَمَأْوٰكَ اَلسَّلَامُ عَلَيْكَ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ

எங்கள் தலைவர் உஸ்மான் (ரலி) அவர்களே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! அல்லாஹ்வின் மலக்குகளும் வெட்கங்கொள்ளும் நாணம் உடையவரே, தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! தம்முடைய ஓதுதலால் திருக்குர் ஆனை அழகு படுத்தியவரே! தம்முடைய தலைமைத் தனத் தால் மிஹ்ராபை ஒளிமயமாக்கியவரே! சொர்க்கத்தில் அல் லாஹ்வின் ஒளி விளக்காய் இருப்பவரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! நேர்வழி நின்ற கலீஃபாக்களில் மூன்றாமவரே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! அல் லாஹு தஆலா தங்களைப் பொருந்திக் கொள்வானாக! அழகிய பொருத்தமாகத் தங்களைப் பொருந்திக் கொள்ளச் செய்வானாக! சொர்க்கத்தைத் தங்களுக்குத் தங்குமிடமாக, குடியிருப்பாக, இறங்குமிடமாக, ஒதுங்குமிடமாக ஆக்கித் தந்தருள்வானாக! தங்களின் மீதும் அல்லாஹ்வின் ஸலாமும் அவனுடைய ரஹ்மத்தும் பரக்கத்துகளும் உண்டாவதாக!

மேலும், ஜன்னத்துல் பகீஃஇல் நல்லடக்கம் செய்யப்பட் டுள்ள நபியவர்களின் குடும்பத்தினர்கள், மனைவியர்கள், மக்கள், மற்றும், ஸஹாபாக்கள், இமாம்கள் அனைவருக்கும் ஸலாம் கூறி துஆ செய்ய வேண்டும்.

மதீனாவின் அருகிலுள்ள 'உஹத்' என்னும் மலையடி வாரம் சென்று அங்கு அடங்கப் பெற்றிருக்கும் உஹதுப் போரில் ஷஹீதான ஸஹாபாக்களுக்கு ஸலாம் கூறவேண்டும். ''உஹது நம்மை அன்பு கொள்கிறது; நாம் உஹதை அன்பு வைக்கிறோம்'' என ஒரு ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

பொருளடக்கம்

## உஹது ஷுஹதாக்களுக்கு ஸலாம் கூறும் முறை

اَلسَّلَامُ عَلَيْكَ يَا سَيِّدَنَا حَمْزَةَ بْنِ عَبْدِ الْمُطَّلِبِ ،
اَلسَّلَامُ عَلَيْكَ يَا عَمَّ رَسُوْلِ اللّٰهِ ،
اَلسَّلَامُ عَلَيْكَ يَا سَيِّدَ الشُّهَدَآءِ وَيَا اَسَدَ اللّٰهِ وَاَسَدَ رَسُوْلِهٖ ،
اَلسَّلَامُ عَلَيْكُمْ يَا شُهَدَآءُ وَيَا سُعَدَآءُ ،
اَلسَّلَامُ عَلَيْكُمْ بِمَا صَبَرْتُمْ فَنِعْمَ عُقْبَى الدَّارِ ،
اَلسَّلَامُ عَلَيْكُمْ يَا شُهَدَآءَ اُحُدٍ كَافَّةً عَامَّةً
وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهٗ ،

எங்களின் தலைவர், ஹம்ஜா (ரலி) அவர்களே! ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களின் சிறிய தந்தையவர்களே! ஷுஹதாக்களின் தலைவரவர்களே! அல்லாஹ்வின் சிங்கமே! அவன் தூதரின் சிங்கமே! தங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! மற்றும் ஷுஹதாக்களே! நற்பாக்கியம் பெற்றவர்களே! நீங்கள் பொறுமை கொண்ட காரணத்தால் உங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! மறுமை வீடு உங்களுக்கு மிக நல்லதாகி விட்டது. உஹதின் ஷுஹதாக்களே, உங்கள் அனைவரின் மீதும் ஸலாமும் அல்லாஹ்வின் அருளும் பரக்கத்துகளும் உண்டாவதாக!

உஹதில் ஹஜ்ரத் ஹம்ஜா (ரலி) அவர்களுடன் அதே கப்ரில் அப்துல்லாஹிப்னு ஜஹ்ஷ் (ரலி) முஸ்அப் இப்னு உமைர் (ரலி) ஆகிய இருவரும் அடக்கப்பட்டுள்ளனர்;

இன்னும் பல ஸஹாபாக்களும் அவ்விடத்தில் அடக்கப்பட்டிருப்பதால், அனைவருக்கும் ஸலாம் கூறி துஆ செய்ய வேண்டும்.

## மதீனாவிலுள்ள மஸ்ஜிதுகள்

மதீனா முனவ்வராவைச் சுற்றிலும் பல்வேறு மஸ்ஜிதுகள் இருக்கின்றன. அவற்றில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் மற்றும் ஸஹாபாக்களும் தொழுதிருக்கின்றனர். ஆகவே, அந்த மஸ்ஜிதுகளைக் கண்டு அவ்விடங்களில் தொழுவது முஸ்தஹப்பாகும். அவை: குபா மஸ்ஜித், ஜுமுஆ மஸ்ஜித், கமாமா மஸ்ஜித், கிப்லதைன் மஸ்ஜித், ஸுக்யா மஸ்ஜித், அஹ்ஜாப் மஸ்ஜித், துபாப் மஸ்ஜித், பனீஹராம் மஸ்ஜித், அபூபக்கர் மஸ்ஜித், அலீ மஸ்ஜித் ஆகியவையாகும்.

### குபா மஸ்ஜித்:

இது மஸ்ஜிது நபவீயிலிருந்து இரண்டு மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மக்காவிலிருந்து ஹிஜ்ரத்து செய்து மதீனாவிற்கு வரும்பொழுது, மதீனாவிற்கு அருகிலுள்ள பனீ அம்ருப்னு அவ்ஃப் என்பவர்களுடைய இடத்தில் தங்கினார்கள். அவ்விடத்தில் நபியவர்களும் ஸஹாபாக்களும் ஒரு மஸ்ஜிதை நிர்மாணித்தார்கள். அதுதான் இஸ்லாத்தின் முதன்முதல் மஸ்ஜிதாகும். அதனை திருக் குர்ஆனிலும் அல்லாஹ் புகழ்ந்துரைத்திருக்கிறான்.

இந்த மஸ்ஜித், மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுந் நபவீ, மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்று மஸ்ஜிதுகளுக்குப் பிறகு மற்றெல்லா மஸ்ஜிதுகளை விடச் சிறப்பானதாகும். "இதில் இரண்டு ரக்அத்துகள் தொழுவது ஓர் உம்ரா செய்வதைப் போன்றதாகும்" என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இந்த மஸ்ஜிதை மிகவும் விரும்பினார்கள். வாரத்

திற்கு ஒருமுறை சனிக்கிழமையன்று இந்த மஸ்ஜிதிற்குச் செல்லும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு அபூபக்கர் (ரலி) உமர் (ரலி) மற்றும் ஸஹாபாக்கள் அனைவரும் அதே வழக்கத்தைக் கடைப்பிடித்து வந்தார்கள். ஆகையால், ஒவ்வொரு ஹாஜியும் மதீனாவில் தங்கியிருக்கும் காலத்தில் வாரம் ஒருமுறை அங்கு சென்று தொழுது வருவது அவசியமாகும்.

### ஜுமுஆ மஸ்ஜித்:

இது குபா மஸ்ஜிதிற்குக் கிழக்கே சற்று தூரத்தில் இருக்கிறது. நபி (ஸல்) அவர்கள் குபாவை விட்டுப் புறப்பட்டு மதீனா நோக்கிச் செல்லும் பொழுது, வழியில் பனூ ஸாலிம் என்ற கோத்திரத்தார் இருந்த இடத்தில் தங்கி ஜுமுஆவை நிறைவேற்றினார்கள். அதுதான் இஸ்லாத்தின் முதன்முதல் ஜுமுஆவாகும். அவ்விடத்தில் இப்பொழுது மஸ்ஜிதும் கட்டிடங்களும் எழுப்பப்பட்டுள்ளன.

### ஙமாமா மஸ்ஜித்:

'ஙமாமா' என்றால் மேகம் என்று அர்த்தம். நபி (ஸல்) அவர்கள் அவ்விடத்தில் தொழுது கொண்டிருந்தபோது மேகம் நிழலிட்டது. அதனால் அதற்கு அப்பெயர் ஏற்பட்டது. இதற்கு மஸ்ஜித் முஸல்லா என்ற மற்றொரு பெயரும் உண்டு. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஆரம்பத்தில் இந்த மஸ்ஜிதிருக்கும் இடத்தில் இரண்டு பெருநாட்களின் தொழுகைகளையும் நிறைவேற்றி வந்தார்கள். இது மஸ்ஜிதுந் நபவீயின் மேற்குத் திசையில் இருக்கிறது.

### கிப்லதைன் மஸ்ஜித்:

இது மஸ்ஜிதுந் நபவீயின் வடமேற்கில் இருக்கிறது. நபி (ஸல்) அவர்கள் ஒருநாள் இதில் லுஹருடைய தொழுகையைத் தொழ வைத்துக் கொண்டிருக்கும்போதுதான் மஸ்ஜிதுல் ஹராமின் பக்கம் திரும்பித் தொழ வேண்டுமென்ற வசனம் அருளப்பட்டது. பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுது

கொண்டிருந்த நபியவர்கள் இரண்டு ரக்அத்துகளை முடித்த போது சட்டம் அருளப்பட்டவுடன் அப்படியே கஃபாவின் பக்கம் திரும்பி மீதி இரண்டு ரக்அத்துகளை நிறைவேற்றினார்கள், ஒரே தொழுகையில் இரண்டு கிப்லாக்களை நோக்கித் தொழுத காரணத்தால் இரண்டு கிப்லாக்களுடைய மஸ்ஜித் என்று இதற்குப் பெயர் ஏற்பட்டது.

### ஸுக்யா மஸ்ஜித்

இந்த மஸ்ஜித் அம்பரிய்யா என்னும் இடத்திற்கருகில் இருக்கிறது. இது முன்னால் பாழடைந்து கிடந்தது. இப்பொழுது லாரிகள், டாக்ஸிகள் நிற்குமிடம் அங்கு அமைக்கப்பட்டிருப்பதால் அது இப்பொழுது செழிப்பாக இருக்கிறது.

### மஸ்ஜிதெ அஹ்ஜாப்:

இதற்கு மஸ்ஜிதே ஃபதஹ் என்றும் கூறப்படும். இது ஸில்ஃ என்னும் மலையின் மேற்குப் புறத்தில் அமைந்திருக்கிறது. பத்தாயிரம் காஃபிர்கள் முஸ்லிம்களிடம் போரிட வந்தபோது பாதுகாப்பிற்காக அவ்விடத்தில் அகழ் வெட்டப்பட்டது. நபி (ஸல்) அவ்விடத்தில் திங்கள், செவ்வாய், புதன் ஆகிய மூன்று தினங்கள் தொழுகை நடத்தினார்கள்; வெற்றிக்காக துஆ செய்தார்கள். அங்கு ஏழு மஸ்ஜிதுகள் அடையாளச் சின்னங்களாக அமைக்கப்பட்டிருப்பதால் இப்பொழுது அவ்விடத்திற்கு ஸப்உ மஸாஜித் என்று கூறப்படுகிறது.

### மஸ்ஜிதெ துபாப்:

உஹத் மலைக்குப் போகும் வழியில் ஸனிய்யத்துல் விதாஃ என்ற இடத்தில் இடப்பக்கம் இது இருக்கிறது. அகழ்ப் போரின்போது நபி (ஸல்) அவர்கள் இவ்விடத்தில் கூடாரமடித்துத் தங்கியிருந்தார்கள்.

### மஸ்ஜிதெ பனீஹறாம்:

மஸ்ஜிதெ அஹ்ஜாபுக்குப் போகும் வழியில் வலப்பக்கம் இது இருக்கிறது. அவ்விடத்தில் நபி (ஸல்) அவர்கள்

தொழுதுள்ளார்கள். அதற்கருகில் ஒரு குகை இருக்கிறது. அதில் நபியவர்கள் தங்கி இருந்தபோது வஹீயும் வந்தது.

**மஸ்ஜிதெ அபூபக்கர், மஸ்ஜிதெ அலீ:**

இவை இரண்டும் மஸ்ஜிதெ கமாமாவிற்கு அருகில் இருக்கின்றன.

இவை தவிர மஸ்ஜிதெ இப்றாஹீம், மஸ்ஜிதெ அல்ப ளீஹ், மஸ்ஜிதெ பனீகுரைளா, மஸ்ஜிதெ பனீஸஃபர், மஸ் ஜிதெ அல் இஜாபா, மஸ்ஜிதெ ஸஜ்தா, மஸ்ஜிதெ உபை ஆகிய பல மஸ்ஜிதுகள் இருக்கின்றன. ஆனால், பல மஸ்ஜிதுகள் இப்பொழுது அடையாளமில்லாமல் போய்விட் டன.

**மதீனாவை விட்டுப் புறப்படுதல்:**

மதீனாவின் ஜியாரத் முடிந்து ஊருக்குத் திரும்புகின்ற நேரம் வந்து விட்டால், மஸ்ஜிதுந் நபவீயில் நபியவர்களின் மிஹ்ராபுக்கு அருகில் அல்லது எங்கு இடம் கிடைக்கிறதோ அந்த இடத்தில் இரண்டு ரக்அத் நஃபில் தொழுது கொள்ள வேண்டும். ஏனெனில், ''மதீனாவுக்கு வருகிறவர் என்னு டைய மஸ்ஜிதில் இரண்டு ரக்அத்துகள் தொழாமல் தன் வீட்டுக்குத் திரும்ப வேண்டாம்'' என்று நபி (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

அதன்பிறகு ரவ்ளா ஷரீஃபுக்குச் சென்று நபி (ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறி, தனக்காகவும், தன் பெற்றோர், உறவினர்கள், நண்பர்கள், மற்றும் முஸ்லிம்கள் அனைவருக் காகவும் துஆ செய்துவிட்டு, பிறகு பின்வருமாறு துஆ செய்ய வேண்டும்.

اَللّٰهُمَّ لَا تَجْعَلْ هٰذَا اٰخِرَ الْعَهْدِ بِنَبِيِّكَ وَمَسْجِدِهٖ
وَحَرَمِهٖ وَيَسِّرْ لِيَ الْعَوْدَ اِلَيْهِ وَالْعُكُوْفَ لَدَيْهِ وَارْزُقْنِيْ

الْعَفْوَ وَالْعَافِيَةَ فِي الدُّنْيَا وَالْاٰخِرَةِ وَرُدَّنَا اِلٰى اَهْلِنَا سَالِمِيْنَ غَانِمِيْنَ ۞ اٰمِيْنَ بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرّٰاحِمِيْنَ ۞

யா அல்லாஹ், இதனை (என்னுடைய இப்பயணத்தை) உன்னுடைய நபியையும் அன்னாரின் மஸ்ஜிதையும் அன்னாரின் ஹரம் ஷரீஃபையும் சந்திக்கும் கடைசி முறையாக ஆக்கிவிடாதே; இதன் பக்கம் திரும்பி வருவதையும் இவ்விடத்தில் தங்குவதையும் எனக்கு (மீண்டும்) எளிதாக்கி வைப்பாயாக! மன்னிப்பையும் உடல்நலத்தையும் இம்மையிலும் மறுமையிலும் எனக்கு நீ தந்தருள்வாயாக! எங்களை எங்கள் குடும்பத்தினரின்பால் சுகமானவர்களாக, நன்மைகளைக் கொள்ளை கொண்டவர்களாக திரும்பச் செய்வாயாக! அருளாளர்களிலெல்லாம் மிகப்பெரும் அருளாளனே! உன்னருளால் இதனை ஏற்றுக் கொள்வாயாக!

பிறகு பின்வரும் முறையில் ஸலாம் கூறவேண்டும்:

اَلْوَدَاعُ يَا رَسُوْلَ اللّٰهِ ۞ اَلْفِرَاقُ يَا نَبِيَّ اللّٰهِ ۞ لَا جَعَلَهُ اللّٰهُ تَعَالٰى اٰخِرَ الْعَهْدِ لَا مِنْكَ وَلَا مِنْ زِيَارَتِكَ وَلَا مِنَ الْوُقُوْفِ بَيْنَ يَدَيْكَ اِلَّا مِنْ خَيْرٍ وَعَافِيَةٍ وَّصِحَّةٍ وَّسَلَامَةٍ ۞ اِنْ عِشْتُ اِنْ شَاءَ اللّٰهُ تَعَالٰى جِئْتُكَ وَاِنْ مُتُّ فَاَوْدَعْتُ عِنْدَكَ شَهَادَتِيْ وَاَمَانَتِيْ وَ

عَهْدِكَ وَمِيْثَاقِ مِنْ يَّوْمِنَا هٰذَا اِلَى الْيَوْمِ الْقِيٰمَةِ وَهِيَ شَهَادَةُ
اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا شَرِيْكَ لَهٗ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ
وَرَسُوْلُهٗ سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ وَسَلَامٌ
عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

யா ரஸூலல்லாஹ்! நான் பிரயாணப்படுகிறேன். யா நபிய்யல்லாஹ்! நான் பிரிந்து செல்கிறேன். தங்களை விட்டும் தங்கள் ஜியாரத்தை விட்டும் தங்கள் முன்னிலையில் நிற்பதை விட்டும் கடைசி முறையாக அல்லாஹு தஆலா இதனை ஆக்காதிருப்பானாக! நன்மை, சுகம், உடல் நலம், நிம்மதி ஆகியவற்றிலிருந்தே தவிர ஆக்காதிருப்பானாக! இன்ஷா அல்லாஹ் நான் ஜீவித்திருந்தால், (யா ரஸூலல்லாஹ்) தங்களிடம் நான் (மீண்டும்) வருவேன். நான் மரணித்து விட்டால், எங்களுடைய இந்த நாளிலிருந்து கியாமத்து நாள்வரை என்னுடைய சாட்சியத்தை, என்னுடைய அமானி தத்தை, என்னுடைய வாக்குறுதியை தங்களிடம் ஒப்படைத் துச் செல்கிறேன். அது, "அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல் லாஹு வஹ்தஹு லாஷரீக்க லஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு" என்ற சாட்சியமா கும். தங்களுடைய இரட்சகன் — கண்ணியத்துக்குரிய இரட்ச கன் — அவர்கள் வருணிக்கின்றவற்றை விட்டும் மகாத் தூயவன். தூதர்களின் மீது ஸலாம் உண்டாவதாக! புகழனைத் தும் சர்வ உலகத்தினரையும் இரட்சித்துக் காக்கின்ற அல்லாஹ் வுக்கே உரியன!

மதீனா முனவ்வராவை விட்டும், புனித ரவ்ளா ஷரீபை விட்டும் பிரிகின்ற போது ஆச்சரியமான நிலை உண்டாகும். ஒருவருக்கு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் எந்த அளவு தொடர்பு இருக்கிறதோ அந்த அளவு அவருக்கு வருத்தமும் கவலையும் ஏற்படும்.

சிலருக்கு அவரை அறியாமலேயே கண்ணீர் வெளிப்படும். கண்ணீர் வெளிவரவில்லையானால், கண்ணீர் வர முயற்சிக்க வேண்டும். ஏனெனில், இந்தப் புனிதமான வாய்ப்பு மறு முறை கிடைக்குமோ, இல்லையோ சொல்ல முடியாது. இந்த நிலை நம்முடைய ஜியாரத் ஏற்றுக் கொள்ளப்பட்டதற்குரிய அடையாளமாகும்.

மஸ்ஜிதுந் நபவீயை விட்டு வெளியாகும் பொழுது மிக்க வருத்தத்துடன் இடது காலை முதலில் வெளியே எடுத்து வைத்து பின்வரும் துஆவை ஓதியவாறு வெளியாக வேண்டும்.

اَللّٰهُمَّ اِنِّىْٓ اَسْئَلُكَ مِنْ فَضْلِكَ

யா அல்லாஹ், நிச்சயமாக நான் உன்னுடைய கரு ணையை வேண்டுகிறேன்.

தன்னுடைய ஊர் கண்களுக்குத் தெரியும்போது பின்வ ரும் பிரார்த்தனையைப் புரிய வேண்டும்.

اٰيِبُوْنَ تَآئِبُوْنَ عَابِدُوْنَ لِرَبِّنَا حَامِدُوْنَ

எங்களுடைய இரட்சகனைப் புகழ்ந்தவர்களாக, வணக் கம் புரிந்தவர்களாக, தவ்பா செய்தவர்களாக நாங்கள் திரும்பி வந்துள்ளோம்.

ஹாஜியாகிறவர் தன்னுடைய ஊருக்கு வந்தவுடன் ஊருக்கு வெளியில் சென்று அவரை வரவேற்று ஸலாம் கூறி முஸாஃபஹா செய்து, அவர் வீட்டுக்குச் செல்வதற்கு முன் தனக்காக துஆ செய்யுமாறு கேட்டுக் கொள்ள வேண்டும். ஏனெனில், ''ஹாஜியைச் சந்தித்தால் அவருக்கு ஸலாம் கூறி அவரிடம் முஸாஃபஹா செய்து அவர் தன் வீட்டில் நுழைவ தற்கு முன் தனக்காக பாவமன்னிப்புத் தேடும்படியாகக் கூறுவாயாக! ஏனெனில் அவர் பாவங்கள் மன்னிக்கப்பட்டவ

பொருளடக்கம்

ராக இருக்கிறார்'' என்று ஒரு ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹஜ்ஜிலிருந்து திரும்பிய ஒருவர் நன்றி தெரிவிப்பதற் காக தன்னுடைய மஹல்லா மஸ்ஜிதில் இரண்டு ரக்அத் தொழுதபின், வீட்டுக்குச் சென்று வீட்டிலும் இரண்டு ரக்அத் தொழ வேண்டும்.

ஹஜ்ஜுடைய காலத்தில் வழியில் ஏற்பட்ட சிரமங்களை எவரிடமும் சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. பிறகு வாழ்நாள் முழுவதும் அல்லாஹு தஆலாவுக்கு வழிபட்டு நடந்திட வேண்டும். அதுதான் ஹஜ் ஏற்றுக் கொள்ளப்பட்ட தற்கு அடையாளமாகும்.

அல்லாஹு தஆலா நம்மனைவருக்கும் ஹஜ்ஜின் பாக்கி யத்தையும் அதனை ஏற்றுக் கொள்ளும் தவ்பீக்கையும் தந்தருள் வானாக! ஆமீன்!

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
யாரப்பி ஸல்லி அலைஹி வஸல்லிம்!

பொருளடக்கம்